# ஸ்ரீ ராமாநுஜன் - 132.

சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் சார்பாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.
ஆசிரியர் :—ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 11 | 1959ஞ டிஸம்பர்மீ விகாரிஞ மார்கழிமீ | ஸஞ்சிகை 12 |
|---|---|---|


## —முக்கியமான அறிவிப்பு.—

ஸஞ்சிகைதோறும் அடைவே வெளியிடப்பட்டு வருகின்ற திருவாய்மொழி நூற்றந்தாதி பாசுரம் அடுத்த ஸஞ்சிகையில் சேர்த்து வெளியிடப்பெறும்.

1. இப்போது இவ்விதழில் வெளிவருகின்ற **பிரபந்தஸாரதத்வஸாரம்** என்னும் நமது நூலைப்பற்றிச் சில வார்த்தைகள் இங்கு விண்ணப்பம் செய்யப்படுகின்றன. இதை ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் உற்று நோக்கவேணும். சில மஹான்கள் இந்நூலைச் சிறிதளவு பார்த்துவிட்டு 'ஏதோ விவாதவிஷயம் போலிருக்கிறது; இதைப்பற்றி நமக்கென்ன?' என்று சில ஏடுகளைத் தள்ளித்தள்ளிப் பார்த்துவிட்டு உள்ளே வைத்திடுவர்கள்.

2. எந்த விஷயத்தையும் எள்ளளவும் விடாமல் பூர்த்தியாகவும் புநஃ புநச்ச உற்றுநோக்கி ஆழ்ந்த விமர்சமும் செய்தருள்பவர் ஒரு மஹானே யென்பதை அடியேன் பலகால் விஜ்ஞாபித்திருப்பதை ஸஹ்ருதயர்கள் மறந்திருக்கமாட்டார்கள். "ஸ்ரீமான் ரிடைர்ட் டிப்டிகலெக்டர். ராவ்ஸாஹிப், S. ராகவையங்கார்ஸ்வாமி, தியாகராயநகர்." என்னுமிந்த ஸ்வாமியே அந்த அத்விதீய மஹாபுருஷரென்பதை இங்கு நினைப்பூட்டுகிறேன். அவர் வெகுகாலம் நீதிபதியாக இருந்ததனால் நீதிநெறி வழுவாது நடுநிலையில் நின்று ஆராய்ச்சிசெய்து நிர்தாக்ஷிண்யமாக ஸ்வாபிப்ராயத்தை வெளியிடுவதில் ஆர்ஜவமுள்ளவரென்பதை அடியேன் கிரஹித்திருக்கிறேன். இதில் யாருக்கும் விப்ரதிபத்தி இராது.

3. பிரபந்தஸாரதத்வஸாரமென்னும் பெயரால் இதில் வெளிவருகின்ற நூலை அடியேனெழுதி முடித்தவுடனே அந்தஸ்வாமி கடாக்ஷித்தருளுமாறு அவரிட மனுப்பி "இதை தேவரீர் அவகாசமுள்ளபோது நிதானமாகக் கடாக்ஷித்து இதை அச்சிட்டு வெளியிடலாமென்று நியமித்தால் வெளியிடுகிறேன்; ஏதாவது திருத்தம் செய்யவேணுமென்று

தோன்றினல் யதேஷ்டமாகச் செய்யலாம்." இத்தியாதிகளை விஜ்ஞாபித்திருந்தேன்.

4. எவ்வளவு பெரிய புத்தகமாயிருந்தாலும் அதை அந்த ஸ்வாமி இரண்டொரு நாளிலேயே பூர்த்தியாகக் கடாக்ஷித்தருளவல்ல வராதலால் இதை வெகு துரிதமாகக் கடாக்ஷித்தருளி "இதிலுள்ள ஒவ்வொரு நிரூபணமும் ஆணித்தரமானது; சில விஷயங்கள்மட்டும் அபூர்வமல்லவென்று சிலர் சொல்லக்கூடுமானலும் அவையும் எனக்கு நித்யாபூர்வமாகவே காண்கிறது. இவைகளுக்கு பதில் சொல்லக் கடமைப்பட்டவர்கள் ஒரெழுத்துக்கும் பதில்சொல்ல முன்வரமாட்டார்கள் என்பது நிச்சயம்; ஆனலும் எந்த மதத்திலும் பிராமாணிகர்களு மிருப்பதால் அவர்கள் எதிரிகளா யிருந்தாலுங்கூட இதில் ஒவ்வோரெழுத்தையும் மிகவு முகப்பர்களென்பதில் என்மனம் சந்தேகம் கொள்ளவில்லை. பலர் மாச்சரியத்திலிகழ்ந்தாலும் பிராமாணிகமான வழியில் பதில் சொல்லவோ எழுதவோ முன்வரவே மாட்டார்களென்பது எனது துணிபு. இந்நூல் விரைவில் அச்சாகி வெளிவர வேண்டியது மிகவும் அவசியம் என்று மனப்பூர்வமாகத் தெரிவித்துக்கொண்டேன்." இத்யாதிகளை யெழுதி நூலையும் திருப்பியனுப்பிக் கொடுத்தார். மற்றும் சில மஹான்களும் கடாக்ஷித்து உகந்தருளினர்கள். அந்நூல் இதோவெளிவருகின்றது.

5. மிகமிக முக்கியமான விண்ணப்பம் கேளீர். இத்தகைய விவாத விஷயங்களில் அடியேன் அபரிமிதமாக எழுதி வெளியிட்டிருக்கிறேனென்பதை உலகமறியும். தென்கலை ஸம்பிரதாயத்திலுள்ளவர்களைக் காட்டிலும் வடகலை ஸம்பிரதாயத்திலுள்ளவர்களே அடியேனுக்கு மிகவும் ஆப்தர்கள் என்பதையும், அவர்களே அடியேனது நூல்களை அதிகமாகக் கடாக்ஷிப்பவர்க ளென்பதையும் அடியேன் விஜ்ஞாபியாமலிருக்க முடியவில்லை. இஃது உண்மையுரை. அன்னவர்கள் எல்லாவற்றையும் பூர்த்தியாகக் கடாக்ஷித்திருந்தும் "இதெல்லாம் அஸங்கதமான லேகனங்கள்" என்றெழுத முன்வரவில்லை. சிலர் வெறுமனேயிருந்துவிட முடியாமல் கண்டித்தெழுதுவதாக எழுந்து உடனே அடியேனுடைய பதில் நூல்களினல் தெளிவுபெற்று வாளாவிருந்திட்டார்க ளென்பதையும் உலகம் அறிந்திருக்கின்றது. அடியேன் இப்போது "இனி நம்முடைய வாழ்நாளில் இத்தகைய விவாத விஷயங்களில் தலையிட்டு எழுதுவது வேண்டா" என்கிற உறுதியுடன் இந்நூலை வெளியிடுகின்றேன். இங்ஙனே உறுதிகொண்டதற்கு யாது காரணமென்னில், தெரிவிக்கிறேன்; இதை மட்டும் யாவரும் நெஞ்சில் திடமாகக் கொள்ளவேணும்.

6. கலா விவாத விஷயமாக அடியேனெழுதும் நூல்களில் **நவீனர்கள்** என்கிற சொல்லை அடிக்கடி உபயோகித்து வருவதுண்டென்பதைப் பலருமறிவர். அதன் கருத்தை உள்ளவாறு கொள்ளாமல் சிலர் சீற்றங்கொண்டிருப்பது முண்டு. தத்துவத்தை இங்கு விவரிக்கிறேன். ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அல்லது பகவத்ராமாநுஜ ஸித்தாந்தத்தில்

புதியதாக வந்து புகுந்தவர்களென்கிற அபிப்ராயத்தினாலன்று அடியேன் நவீனர்களென் றெழுதிவருவது. இங்ஙனே பிறர் கருதியிருப்பது மிகவும் தவறு. திவ்யப்பிரபந்த பாராயணங்களில் போட்டிச்சண்டை யிடுவதற்குப் புதிதாக வந்து புகுந்தவர்கள் என்கிற அபிப்ராயங்கொண்டே நவீனர்கள் நவீனர்களென்று அடியேன் பலகாலு மெழுதிவருவது.

7. வடமொழி வேதம் எப்படி ப்ராஹ்மண ஸமுதாயத்திற்கெல்லாம் பொதுவோ, அப்படி தென்மொழி வேதமாகிய திவ்யப்ரபந்தம் ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்திற்கெல்லாம் பொதுவானது. ஸம்ஸ்க்ருத வேத ஸம்ப்ரதாயத்தில் இதுகாறும் போட்டிச்சண்டை ஏற்பட்டிராததுபோலவே திவ்யப்ரபந்த ஸம்பிரதாயத்திலும் இரண்டொரு நூற்றாண்டுக்கு முன் வரையில் எவ்விதமான போட்டிச்சண்டையும் எள்ளளவும் ஏற்படாமலேயிருந்தது. வேத மோதுபவர்கள் யாவரும் ஹரிः ஓம் என்று சொல்லித் தொடங்குகிறார்களே யொழிய வேறுவிதமான வழக்கம் எங்கும் காண்பதில்லை. வேத மோதுபவர்களிலேயே சில வகுப்பினர்க்கு ஹரியினிடத்தில் த்வேஷமும் ஹரனிடத்தில் அன்பும் இருந்தாலுங்கூட அவர்கள் ஹரः ஓம் என்று சொல்ல ஆரம்பித்தார்களென்று இதுவரையில் கேட்டதில்லை. இதேபோல திவ்யப்ரபந்த மோதவேண்டியவர்களுக்கு ஒரு பத்ததி ஸகல திவ்யதேசங்களிலும் ஸமரீதியாக ஏற்பட்டு நிரவத்யமாக நடந்துவருகையில் அஸஹிஷ்ணுதையாலே இடையில் போட்டிச்சண்டையிட ஆரம்பித்து அபரிமிதமான பொருட் செலவுகளை இருதரப்பிலுமுண்டாக்கி, நீண்டகாலமாக நிகழ்ந்துவந்த ஸௌஜந்ய ஸௌமநஸ்யங்களுக்கும் பங்கத்தை விளைவித்து மிகவும் அருவருக்கத்தக்க ஒரு தாண்டவத்தை நடத்திவருபவர்கள் யாவரோ அவர்களையே நாம் நவீனர்களென்பது. அன்னவர்கள் யாவரென்பதை நிர்ணயிப்பதில் ப்ரயாஸ லேசமுமில்லை. புதிதாக விவாதத்தை யுண்டாக்கின தேவாலயங்களில் ஹைகோர்ட்டுவரையிலும் பார்லிமெண்டுவரையிலும் சென்று முடிந்த வியவஹாரங்களினால் அது நிர்ணயிக்கவெளிது. நீதிமன்றங்களில் அவரவர்கள் யதேஷ்டமாகப் பொய் புளுகுகளைப் பேசிக்கொண்டாலும் அந்தரங்க ஸாக்ஷ்யம் அபலபிக்க வொண்ணாததாகவன்றோ வுள்ளது.

8. திவ்யப்ரபந்தங்களில் அபிநிவேசம் தோன்றுவது தவறல்ல. இழந்த நாளைக்கு அநுதபித்து ஸன்னிதி கோஷ்டிகளில் கலந்துகொண்டு ஸேவிப்பதிலும் ஈஷத்தும் தவறில்லை. தவறில்லையென்பதுமட்டுமல்ல; மிகமிகக் கொண்டாடத் தக்கதுமாம். வீணைகச் சில கல்பனைகளைச் செய்து அநீதிகளுக்கும் அதர்க்கணங்களுக்கும் எல்லை கடந்த இடமளித்து விவாதங்களை வளர்த்து ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தையே பிறர் பரிஹஸிக்கும்படியாக ஆக்கிக்கொண்டு போருவதும் பொருவதும் பிராமாணிகர்களுக்கு அழகியதா? தென்கலை ஸம்பிரதாயத்தைவிட வடகலை ஸம்பிரதாயத்தில் பண்டிதர்களும் விவேகிகளும் ஆசார சீலர்களும் பாப பீருக்களும் அதிகமாகவே யுள்ளார்களென்பது எனது அந்த

ரங்க ஸாக்ஷிகமான அபிஸந்தி. இவ்வபிஸந்தியை அடியேன் வெளியிடுவதுபற்றிச் சில ஸயூத்த்யர்கள் வெகுண்டாலும் அதற்கடியேன் அஞ்சுபவனல்லேன். எதிலும் உள்ளதை உள்ளபடி வெளியிடுவதில் அடியேன் பின்வாங்குபவனல்லேன். நிற்க. ஸதாசார சீலர்களும் மஹா விவேகிகளுமான வடகலை ஸம்பிரதாயஸ்தர்கள் ப்ரக்ருத விஷயங்களான அடியேனுடைய நூல்களையெல்லாம் ஆர அமர ஆராய்ந்து பார்த்தவர்களே. அப்படியிருந்தும் இதுவரையில் வீண்பிடிவாதத்தை விடாமல் விவாத அபிவிருத்திக்கே இடமளித்து வருகிறார்கள். அடியேன் இருபது வருஷங்களுக்கு மேலாக இதுவரையிலும், இப்போது இந்நூலிலும் எழுதாத விஷயங்களை இனி எழுதப்போவதில்லை. இவ்வளவையும் கண்டுங்கூட மனம் தெளியாதவர்கள் இனிமேலா தெளியப்போகிறார்கள்? அடியேனெழுதுவதே காரணமாக வீண்பிடிவாதத்தை இன்னமும் வளரச் செய்யவேபோகிறார்கள். இதை அடியேன் நன்கறிந்தே இவ்விவாதவிஷயமாக எழுதுவதை இவ்வளவோடு நிறுத்திக்கொள்ள உறுதிகொண்டபடி.

9. அத்வைதிகள் முதலான மதாந்தரஸ்தர்களை நோக்கி நாமும், நம்மை நோக்கி அவர்களும் வேதாந்த விஷயங்களில் தாக்கியெழுதினால், ஒரு வகுப்பில் விடை கூறமுடியாமற்போனால் "**மதிதௌர்பல்யாத் ந மததௌர்பல்யம்**" என்று சொல்லிவிடுவதுண்டு; இது யுக்தமுமாகும். இந்நூலில் அடியேன் தெரிவிக்கும் விஷயங்கள் மதஸம்பந்திகளல்ல. நவீந கல்பனைகளை நன்கு மூதலித்து இவை ஸர்வாத்மநா அநுபன்னங்கள் என்பதை அசைக்கமுடியாமல் காட்டியிருக்கிறேன். இவற்றுக்கு ப்ராமாணிகர்கள் விடை கூறவேண்டியது அவசியம். ப்ரமம் (அதாவது அந்யதாஜ்ஞானம்) மனிதர்களுக்கு ஸஹஜதோஷமாதலால் அது அடியேனுக்கும் அவர்ஜநீயமாகி, அடியேன் எழுதியிருப்பவை உண்மைக்கு மாறானவையாயிருந்தால், சிறந்த பண்டிதர்களும் அடியேனுக்குச் சிறந்த ஸுஹ்ருந்மணிகளும் அடியேனுடைய அக்ருத்ரிம கௌரவ ப்ரதிபத்திக்குப் பாத்ரபூதர்களும் லேகந குசலர்களுமான ஸ்ரீமதுபயவே. திருக்குடந்தை, இளையவில்லி ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி, திருக்குடந்தை கண்ணன்ஸ்வாமி, திருவிண்ணகர் நவநீதம் ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி ஆகிய இம்மூவரில் ஒருவரோ அல்லது மூவருமேயோ இந்நூலில் அடியேனெழுதியிருப்பவற்றை ருஜு மார்க்கத்தில் மறுத்து என்னையும் உலகத்தையும் தெளிவுபெறுத்தட்டும்.

10. பலருடைய மதிப்புக்கும் அடியேனுடைய மதிப்புக்கும் இலக்கான ஸ்ரீமத் D. ராமஸ்வாமி ஐயங்கார், அட்வொகேட், அவர்களும் இந்த வேண்டுகோளுக்குப் பாத்திரபூதரே. மற்றையோர்கள் எழுதப்புகுந்தால் விஷயத்தைவிட்டு விலகி வெறும் நிந்தைகளினால் க்ருத க்ருத்யர்களாவர்கள் என்றெண்ணியே இந்நான்கு மஹான்களை விசிஷ்ய குறிப்பிடுகிறேன். இவர்களும் உபேக்ஷித்திருப்பார்களாகில், இவை மறுக்கவொண்ணாத ப்ராமாணிக **விஷயங்களென்றே** தேறும்.

# இந்நூலின் அரங்கேற்ற விழா நடந்த செய்திகள்.

ஸ்ரீகாஞ்சியில் 4–12–59 தேதியிலிருந்து நடைபெற்ற நம்பிள்ளை மஹோத்ஸவத்தில் மஹா கோஷ்டியில் இந்நூல் அரங்கேற்றம் செய்வதாகப் பிரசுரம் செய்யப்பட்டு 4, 5, 6, 7 ஆம் உத்ஸவ நாட்களில் இரவு திருவாய்மொழி சாத்துமுறை கோஷ்டியில் பல மஹான்கள் முன்னிலையில் அரங்கேற்றம் செய்யலாயிற்று. நித்யம் 3 மணிகாலம் வீதம் 4 நாட்களில் 12 மணிகாலம் இந்நூலை விவரித்து உபந்யாஸம் செய்யப்பட்டது. அந்த கோஷ்டிக்குத் தலைமை வஹித்தவர்கள் இருவர்; 1. ஸ்ரீ. உ. வே. N. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி, அட்வொகேட், ஸன்னிதி வீதி. 2. ஸ்ரீ. உ. வே. N. S. பாஷ்யமையங்கார், ப்ளீடர், திருக்கச்சிநம்பி வீதி. இவ்விரு மஹான்களும் ஆங்கிலத்தில் எழுதிய அபிநந்தன பத்ரிகைகள் வருமாறு;—

SRI N. SRINIVASACHARIAR, ADVOCATE. — No. 66, SANNIDHI STREET.

## PRABANDASARA-TATVASARA

BY

**Sri P. B. ANNANGARACHARIAR SWAMY.**

I had the pleasure of attending the function of "அரங்கேற்றம்" of the book mentioned above. It does not require any "அரங்கேற்றம்" as the book is published by Sri Swamy. But as the Swamy has taken much pain in publishing the book with several clinching quotations from the researches made by him in the ancient and valuable (ஓலைச்சுவடிகள்) cadjan leaves and publications preserved in the Connemora (KANNMORA) Library and in the houses of erudite and recoginised pundits of the past, for the sake of several undisputed facts contained in the book easily understandable even by the uninitiated Vaishnavites some sort of "அரங்கேற்றம்" was required to be made, at the request of several friends and advisers of Sri Swami, for four days at about three hours each day, in the shrine of Sri Nampillai. Several undisputed facts contained in the book were not previously known to persons like me. We had the opportunity of learning the truth of several facts very easily, as we could not, otherwise, learn the truth even if we had tried for several years with our own exertions.

The special feature of this book is that the facts contained in it are fortified by quotations from ancient authorities which cannot possibly be demonstrated by anybody.

I noticed a rare and significant occurrence on the opening day of the function on 7—12—1959, when the Swamy finished the exposition of the facts contained in paragraph 35, namely, that the book entitled "Prabanda Sara" containing several erroneous and controvertial allegation, is not fit to be the work of a learned and famous author. This was followed by a beat of drums from somewhere outside, for about fifteen minutes, thereby showing to the audience, and to all the residents of the street with Vadagalais and Thengalais, that the truth of the conclusions contained in paragraph 35 had the approval of even the superhuman beings from above. Such is the significance attached to the publication of the book under review.

Kancheepuram,<br>
12—12—1959.

N. SRINIVASACHARI.

# PREFACE.

**Sri. N. S. BHASHYAM IYENGAR, Pleader.**

*Thirukachinambi Street, L. Kancheepuram.*

"PRABANDHA SARA THATHVA SARA" published by Vidwan Sri. Prathivathi Bhayankaram Annangarachariar Swamy of Kanchi after formal Arangetram function of the same during the Nampillai festival this year is a Guide to the proper and critical study and appreciation of Divya Prabandham as indicated by Acharyas and commentators of Divya Prabandham. It throws light to the scholars interested in research to appreciate the antiquity and importance of the Thanian "Sri Sailesa Dayapathram" and Sriman Venkata Nadharya" and the grouping and classification of Prabandam as directed by Sriman Nathamunigal. This book is the effort of the study of the author from ancient books in all public libraries and those maintained by Pandits and Several manuscripts in print and cadjon. The public is highly indebted and grateful for the stupendons task of the author in the publication of this book.

# ஸ்ரீமத் N. ஸ்ரீநிவாஸாசாரியார் B. A. B. L. ஸ்வாமியின் ஆங்கில வியாஸத்தின் மொழி பெயர்ப்பு

"பிரபந்தஸார தத்வஸார" மென்னும் புத்தகத்தின் அரங்கேற்ற விழாவுக்கு நான் அழைக்கப் பட்டுச் சென்றிருந்தேன். ஸ்ரீ பிரதி வாதி பயங்கரம் ஸ்வாமி எழுதிய புத்தகம் என்றால் அதற்கு அரங்கேற்றமே அவசியமில்லை.

ஆனாலும் அந்தஸ்வாமி ஷை புத்தகத்தில் மிகவும் அருமையான விஷயங்களை யெழுதியிருந்தபடியால் அதை ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாரும் வியக்தமாகத் தெரிந்து கொள்ள வேணுமென்கிற நோக்கங் கொண்டே அரங்கேற்றமென்று ஒரு வியாஜம் வைத்து சிறுவர்களுக்குங் கூட விஷயங்கள் நன்கு புரியும்படி 4 நாள்களில் நித்தியம் 3 மணி காலம் வீதம் வெகு விளக்கமாக எடுத்துரைத்தார். இந்நூலிலுள்ள பல விஷயங்கள் இதற்குமுன் என்போல்வார்க்கு அடியோடு தெரியாது. சிற்சில விஷயங்கள் ஏற்கெனவே காதில் விழுந்திருந்தாலும் அவை ஸரியான மூலாதாரங்களோடு எமக்குத் தெரியாமலிருந்தது. இப்போது 4 நாள் நீண்ட உபந்யாஸங்கள் கேட்டதில் உண்மையாகத் தெரிவிப்பது இதுவே, 5, 6 வருஷகாலம் சிரமப்பட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய அரிய பெரிய பல விஷயங்களை மிக எளிதாகத் தெரிந்து கொண்டோ மென்பதே.

இந்நூலில் தெரிவிக்கப்பட்டுள்ள ஒவ்வொரு விஷயமும் அனேக அத்தாட்சிகளுடன் தெரிவிக்கப்பட்டிருப்பது இந்நூலுக்குத் தனிப்பட்ட சிறப்பாகும்.

இதில் ஒரு ஆச்சர்யம். அதாவது 7—12—59 ஆகிய முதல் நாளில் இந்த அரங்கேற்ற உபந்யாஸம் நடந்து கொண்டிருக்கையில் இதில் 35-வது பாராவோடு அன்றைய உபந்யாஸத்தை முடித்தார். ஷை பாராவின் முடிவில் "அனேகவிதமான தவறுகள் மலிந்த பிரபந்தஸார மென்கிற நூல் ஒரு சிறந்த ஆசாரியருடைய நூலாக இருக்கத்தகுதியில்லையென்பதை அனேகவித வாத்யங்களை முழங்கிக் கொண்டே தெரிவிக்கிறேன்" என்று எழுதியிருக்கிறார். அந்த இடத்தை ஸ்வாமி வாசிக்கும்போது நான்கு திக்கிலும் ஒரு பெரிய வாத்ய கோஷமுண்டாகி கால்மணி காலம் ஒலித்தது. இது மனிதர்கள் செய்த செயலல்ல; தேவலோகத்திலிருந்து சிலர் வந்து செய்ததாகவே எல்லாரும் நிச்சயித்தார்கள். இதை அந்த வீதியிலிருந்த தென்கலையார் வடகலையார் யாவரும் நன்றாக அறிவார்கள். இதனால் இப்புத்தகத்தின் பெருமையை தேவலோகத்தாரும் மெச்சினார்களென்று அறிந்து மகிழலாம்.

**N. ஸ்ரீனிவாஸாசாரி,** அட்வொகேட்

# விஷயங்களின் அட்டவணை

இந்நூலில் 120 (நூற்றிருபது) பாராக்கள் உள்ளன இவற்றால் தெரிவிக்கப்படும் விஷயங்களை பாராலக்கமிட்டு ஸாரமாக இங்குக்காட்டுகிறேன். இந்நூலை முழுதும் பார்க்க அவகாசமற்றவர்கள் தங்களுக்கு அவசியமாகத் தோன்றுகின்ற விஷயங்களை மட்டும் பார்த்துக்கொள்ள இந்த அட்டவணை மிகவுமுதவும்

# விஷயங்களின் அட்டவணை



## ஸாரமான சில வார்த்தைகள்

இச்சிறு நூலில் நவீனர்களின் நூதநஸ்ருஷ்டிகள் முதலிய ஸகலங்களும் கண்ணாடிபோல் காட்டப்பட்டிருக்கின்றன. இவற்றுக் கெல்லாம் விடைதரவேண்டியது மிகவும் அவசியம். பிரபந்த சாரத்தையும் பிள்ளையந்தாதியையும் அண்ணங்கராசாரியரே இளமையில் ஒப்புக் கொண்டிருக்கிறாரே என்கிற ஒருவார்த்தையினாலேயே நாங்கள் இதை எளிதாகக் கண்டித்துவிட முடியும் என்று சிலர் சொல்லிக் கொண்டிருப்பதும் நமது காதில் விழுகிறது.

# ஸாரமான சில வார்த்தைகள்

எம்பெருமானார் தரிசனம் நவீனமென்பதை யதிராஜஸப்ததியில் தேசிகனே ஒப்புக் கொண்டிருக்கிறார் என்றுபிறர் எழுதியிருப்பதே பொக்குமிது. ஆராய்ச்சி செய்ய ப்ரஸக்தி ஏற்படாதகாலங்களில் கதாநுகதிகந்யாயத்தாலே யெழுதியிருப்பதை விட்டிட்டு, நிரூபணங்களுக்குத் தகுதியான நிரூபணங்களைக் காட்டி உலகத்தை உகப்பிப்பதே நிபுணக்ருத்யமாகும்.

நாம் ஸ்வகீயம் பரகீயம் என்று வாசி பாராமல் எதிலும் நடு நிலையில் நின்று ஆராய்ச்சி செய்து வருமியல்வுடையோ மென்பதை தடஸ்தர்கள் நம்பும்படி சில நிதர்சனங்களினால் மூதலிக்கிறோம்.

(1) அஸ்மதாசார்ய பாதரான ஜகத்குரு ஸ்ரீ கர்திஸ்வாமி "கீதார்த்த ஸங்க்ரஹ தீபிகா" என்னும் க்ரந்தத்தை மணவாள மாமுனிகள் அருளிச் செய்ததாக 50 ஆண்டுகட்கு முன் தேவநாகர லிபியில் தமது அச்சுக்கூடத்தில் பதிப்பித்தார். அப்போது அடியேன் வித்யார்த்தி தசையிலிருந்தேன். அந்த க்ரந்தம் 330 பக்கங்கள் கொண்டதாதலால் முத்ரணம் 2, 3 வருஷகாலம் நடைபெற்று வந்தது ஸ்ரீஸ்வாமி நியமனத்தினால் அப்போது அதை அடியேனும் ப்ரூப் பார்த்து வந்தவனே. ஆனால் அப்போது அதனை ஆராய்ச்சி செய்ய ப்ரஸக்தி ஏற்படாமையினால் அடியேனும் அதனை மணவாள மாமுனிகளின் க்ருதியாகவே நம்பியிருந்தேன் பிறகு 20 வருஷம் கழித்து விமர்சிக்க நேர்ந்த போது அது மாமுனிகளின் க்ருதியன்று என்பதை நிஷ்கர்ஷித்து ஸ்ரீஸ்வாமி ஜீவித்தெழுந்தருளியிருந்த காலத்திலேயே வெளியிட்டேன்; ஸ்வாமியும் கடாக்ஷித்துத் திருவுள்ள முகந்தார்.

(2) அடியேனுக்கு மற்றோராசார்யரும் பூர்வாச்ரமத்தில் மாதாமஹருமான ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி பரந்த ரஹஸ்ய மென்கிற க்ரந்தத்தைப் பெரிய வாச்சான் பிள்ளையின் க்ருதியாக 60 ஆண்டுகட்குமுன் அச்சிட்டிருந்தார்; அடியேனும் பெரிய வாச்சான் பிள்ளையையும் ஆச்சான் பிள்ளையையும் ஏகவ்யக்தியாக மருண்டிருந்த காலத்தில் அப்படியே கிரஹித்திருந்து ப்ரவசனமும் செய்து போந்தேன். சில வாண்டுகளுக்கு முன்பே ஆராய்ச்சி செய்ய ப்ரஸக்தி ஏற்பட்டு உண்மையை வெகு விரிவாக வெளியிட்டிருக்கிறேன்.

(3) பெரியாழ்வார் திருமொழிக்கு ஸ்வாபதேச வியாக்கியான மென்று ஒன்று திருவாய் மொழிப்பிள்ளை பணித்ததாக அச்சிடப்பட்டுள்ளது; இதையும் சில வாண்டுகட்கு முன்பு ஆராய்ச்சி செய்து உண்மையை வெளியிட்டிருக்கிறேன். மற்றும் ஈட்டுப்ரமாணத்திரட்டு, ஞானஸார ப்ரமேயஸார வியாக்கியானங்கள் முதலியவற்றிலும் ஆராய்ச்சி செய்து உண்மையை வெளியிட்டிருக்கிறேனென்பது ஜகத்ப்ரஸித்தம். மேலே குறித்த க்ரந்தங்களில் அவத்யமிருப்பதாகக் கண்டதுமில்லை, காட்டினதுமில்லை. கர்த்தாக்களின் திருநாமங்களை ப்ரமித்தார்களென்று மட்டும் நிரூபித்திருக்கிறேன். ப்ரக்ருதத்தில் அப்படியன்று; விஷயங்களெல்லாம் அத்யந்தம் அஸம்பத்தங்களென்று அசைக்க வொண்ணாதபடி நிரூபித்திருக்கிறேனாதலால் ப்ராமாணிகர்கள் சிரமேற் கொள்ள வேண்டியதாயிற்று.

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# பிரபந்தஸாரதத்வஸாரம்

[ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியருடைய ஆராய்ச்சி நூல்களில் தலைமை பெற்றது]

---

### — நூற்பெயரின் பொருள் விவரணம் —

1. பிரபந்தஸாரதத்வஸாரமென்று இந்நூலுக்குப் பெயரிடுகின்றேன். பிரபந்தஸாரமென வழங்கிவரும் ஒருநூலின் உண்மையைப்பற்றி ஸாரமாகத் தெரிவிப்பது—என்றபடி. அந்த நூலைப் பற்றி ஆழ்ந்து விமர்சிக்க ப்ரஸக்தியேற்படாததனுல் பிறருடைய பேச்சுக்களின்படி இது தேசிகக்ருதியாக இருக்கலாம் என்று நாம் நெடுநாள் நம்பியிருந்ததுண்டு. அந்த நம்பிக்கை மிகத்தவறென்று தேறியதை நிரூபிக்கிறோமிங்கு. எத்தனையோ விஷயங்களில் நாம் ஆராய்ச்சி செய்யப்புகாதவளவில் சிலர் சொல்லிக் கொண்டிருப்பதை நம்பிவிடுவது ஸஹஜந்தானே. ஸ்ரீராமாயண ஸ்ரீவிஷ்ணு புராண ஸ்ரீமஹாபாரதாதிகளான பலபல மஹாக்ரந்தங்களிலும் ஏற்பட்டுள்ள ப்ரக்ஷேப உத்க்ஷேபங்களை நெடுநாள் தெரிந்து கொள்ளாமல் ஸாமாந்யமாகத் தவறுகளை அப்படியே நம்பியிருந்து ஆராய்ச்சிக்கு அவகாசமேற்படும் போதுகளிலும் ஆப்தோபதேசாதிகள் ப்ராப்தமாகும் ஸமயங்களிலும் பழைய கொள்கையைத் திருத்திக் கொள்ளப்பெறுகிறோமென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நமேயன்றோ.

### — உண்மையான ஆராய்ச்சியின் உபயோகம் —

2. தென்மொழியில் ஆராய்ச்சியென்றும் வடமொழியில் விமர்சமென்றும் வழங்கப்படுகிற ஸமாலோசனையானது ஸமீசீநமான முறையில் தோன்றினுல் அதனுல் தேறுகின்ற வஸ்துஸ்திதி பிராமாணிகர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டே தீரும். பல நாட்களில் தோன்றாத ஆராய்ச்சியானது ஒரு ஸமயவிசேஷத்தில் தான் தோன்றும். 'இவ்வாராய்ச்சி இத்தனை நாட்களாக ஏன் உதிக்கவில்லை?' என்று விவேகிகள் வினவமாட்டார்கள்.

### — ப்ரக்ருதாநுகூலமான வொருகதை —

3. ஒரு சிறுவிஷயம் நோக்குக. பரமைகாந்தியான வொரு வைதிகர் தமது திருமாளிகையில் தளிகை செய்வதற்கு ஒருவரை அமர்த்திக்கொள்ளுகிறார். அந்த சமையற்காரர் பலபெரியார்களி

டத்திலும் கலந்து பழகிக்கொண்டும் ஆங்காங்கு தளிகை செய்து கொண்டுமிருந்ததனுல் அவருடைய சரிதையில் (அல்லது உத்பத்தியில்) எவ்விதமான விசிகித்ஸையும் தோன்ருமலே அவரைப் பரிசுத்தராகவே நினைத்திருந்ததனுல் கல்மஷமற்ற நெஞ்சினராயிருந்தார் அந்த வைதிகர். ஒரு ஸமய விசேஷத்தில் சில ஆப்தர்களினுல் தத்துவம் தெரிந்துகொள்ள நேர்ந்தது. தகப்பனுர் காலஞ்சென்ற பலவாண்டுகட்குப் பின்னர் தோன்றிய வ்யக்தியென்று தெரிய வந்தது. பிறகு ஆரஅமர விசாரிக்கவும் ப்ராப்தமாயிற்று. பல ஹேதுக்களினுல் நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயமாய் விட்டது. பிறகு அந்த வைதிகருடைய நெஞ்சு எவ்வளவு தாபமுற்றிருக்குமென்பதை நாம் சொல்ல வேணுமோ? 'இத்தனை நாளாக இதை ஏன் இவர் ஆராய்ச்சி செய்யவில்லை?' என்று யாரேனும் கேட்பாருளரோ? அவரைப் பல ஸமயங்களில் மாதாபித்ருச்ராத்தங்களில் நிமந்த்ரித்து அவருடைய ஸ்ரீபாததீர்த்தத்தையும் ஸ்வீகரித்தவரே இந்த வைதிகர். அக்காலத்துக் கொள்கையின்படி நடந்த காரியங்களுக்கு அவத்யம் சொல்லப்போகாதன்ருே. பிறகு பிறர் வஞ்சிக்கப்படாதபடிக்கு உண்மையையுணர்த்துவதும் அவருடைய கடமையாகுமன்ருே.

4. ப்ரக்ருதம் நாம் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு அவதாரிகையாக இங்ஙனே பலபல விஷயங்கள் எழுதவேண்டியதுண்டு. அவற்றைப் பிறகு வைத்துக் கொள்வதாக விட்டிட்டு விவேகிகள் விமர்சிக்கத்தக்க முக்கிய விஷயங்களை முன்னம் விவரிக்கவெழுகின்ருேம்.

---

# பெரியாழ்வாருடைய திவ்யஸூக்தி விமர்சம்

## — திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமென்பதுபற்றி —

5. ஆழ்வார்களுள் பெரியாழ்வார் அருளிச்செய்த திவ்வியப் பிரபந்தம் ஒன்ருே? இரண்டா? என்று விமர்சிக்க ஒரு ஸ்ரீவைஷ்ணவர்க்கும் ருசி பிறவாது, ப்ரஸக்தியுமிராது. திருப்பல்லாண்டென்கிற ஒரு பிரபந்தமும் பெரியாழ்வார் திருமொழியென்கிற மற்ருெரு பிரபந்தமுமாக இரண்டு திவ்வியப்பிரபந்தங்களை இவ்வாழ்வார் அருளிச்செய்தாரென்பது சிறியாரோடு பெரியாரோடு வாசியற அனைவருமறியத்தக்கதும் அறிந்ததுமாம். 'இரண்டல்ல, ஒரே பிரபந்தந்தான்' என்று சாதிப்பதற்குச் சிறிதேனும் உபபத்தியுண்டோவென்று பார்த்தால், உபபத்தி சிறிதுமில்லாததோடு அநுபபத்திகளே அதிகமாகப் புலப்படும். நூறு பாசுரங்களை ஒரு பத்தாகக்கொள்வது ஸம்பிரதாயம். இந்த ரீதியில் *வண்ணமாடங்கள்சூழ்* தொடங்கி *மெச்சூது சங்கமளவும் ஒரு பத்தாக எங்கும் ப்ரஸித்தியுள்ளது. இப் பெரியாழ்வார்திருமொழிக்குத் திருப்பல்

லாண்டைத் தொடக்கமாக வைத்திட்டால் *மெச்சூதுசங்கப்பதிகம் இரண்டாம்பத்தின் ஆரம்பமாக இருக்கமுடியாது; *வட்டுநடுவே பதிகந்தான் இரண்டாம்பத்தாக அமையவேண்டும். இவ்விதம் எங்குங் கண்டதில்லை. இருகலையாரும் *மெச்சூதுசங்கத்தையே இரண்டாம்பத்தின் தொடக்கமாக அறுதியிட்டிருப்பது அபலபிக்க வொண்ணுததொன்றும். *வண்ணமாடங்கள் தொடங்கி *மெச்சூது சங்கமளவும் நூறு பாசுரங்களிருப்பதனுல் முதற்பத்தின் ஆதியந்தங் களில் விப்ரதிபத்தி கொள்ளக் காரணமேயில்லை. திருப்பல்லாண் டைப் பெரியாழ்வார் திருமொழிக்கு முதற்பதிகமாகக் கொண்டால் முதற்பத்து நூற்றுப்பத்துப் பாசுரங்கள் கொண்டதென்று அஸம் பத்தமாகச் சொல்லவேண்டிவரும். அன்றியும், திருப்பல்லாண்டைத் தனிப்பட்ட திவ்வியப்பிரபந்தமாகக் கொள்ளாவிடில், பலபல கெட் டங்களில் திருப்பல்லாண்டை மட்டும் ஸேவித்து வேறு பிரபந்தம் தொடங்கி ஸேவிப்பது அநுசிதமாகும்.

### — இங்கே தோன்றக்கூடிய எதிர்வாதத்திற்கு மறுப்பு —

6. திருப்பல்லாண்டு ஒருபெரிய பிரபந்தத்தின் ஏகதேசமா யிருக்கச்செய்தேயும் அதைத் தனிப்பிரபந்தம்போல் ஸேவித்து வரும்படி பூருவாசாரியர்கள் ஒரு நிபந்தனை செய்திருந்தபடியாலே அதன்படி ஆசாரம் வருகிறதென்றும், அதுகொண்டு அதைத் தனிப் பட்ட பிரபந்தமாக்கிவிட முடியாதென்றும் சொல்லுகிறேமென்னில்; பூருவாசாரியர்கள் அப்படியொரு நிபந்தனை செய்திருந்தது உண்மை யாகில் பெரியவாச்சான்பிள்ளை முதலான பேராசிரியர்கள் அதனைக் கடந்து தனிப்பிரபந்தமாகக்காட்டி வியாக்கியானம் செய்தருளி யிருக்கவேமாட்டார்கள்.

### — ஸ்ரீபரகாலஸ்வாமி வியாக்கியான ப்ரதர்சநம் —

7. தென்கலை ஸம்பிரதாயத்திற்போல் வடகலை ஸம்பிரதாயத் திலும் திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக்கும் ஸ்ரீபரகாலஸ்வாமியின் வியாக்கியானம் தோன்றியேயுள்ளது. அதி லும் திருப்பல்லாண்டைத் தனிப்பிரபந்தமாகவும் பெரியாழ்வார் திருமொழியைத்தனிப்பிரபந்தமாகவுமே கொண்டமை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. திருப்பல்லாண்டு வியாக்கியானத் தொடக்கத்தில் ஒருச்லோகமும், பெரியாழ்வார்திருமொழி வியாக்கி யானத் தொடக்கத்தில் ஒருச்லோகமும் அவர் இட்டிருக்கிறூர். "விஷ் ணுசித்தம். நத்வா ததீயமம்ருதோபமதிவ்யஸூக்தம் க்ருஷ்ணவதார விஷயம் விவ்ருணோமி பக்த்யா" என்கிற சுலோகம் ஸ்ரீபரகாலஸ்வாமி யின் பெரியாழ்வார்திருமொழி வியாக்கியானப்ராரம்பத்தில் விளங்கா நின்றது. இதனுல் இது தனிப்பட்ட பிரபந்தமென்பது ஸுஸ்பஷ்ட

மாகக் காட்டப்பட்டது. அடுத்தபடியாக அவதாரிகையிலும் "கீழ் திருப்பல்லாண்டில் மங்களாசாஸனம் செய்து" இத்யாதி வாக்யங்களாலே இது ப்ரத்யேகப்ரபந்தமேயென்பதை நன்கு காட்டியிருக்கிறுர். அவர் காட்டியிருக்கிறுரென்பது நமக்கு விஷயமேயன்று. திருப்பல்லாண்டின் பிரமேயம் வேறு; பெரியாழ்வார் திருமொழியின் பிரமேயம் வேறு. அதற்குமிதற்கும் என்ன சேர்த்தி? அது ஒரு காலத்திலும், இது வேருெரு காலத்திலுமருளிச்செய்யப்பட்டது. ஒரே காலத்திலருளிச் செய்யப்பட்டிருந்தாலுங்கூட ஏகப்ரபந்தமாவதற்கு வழியேயில்லை. பூர்வோத்தரமீமாம்ஸைகளுக்கு ஐகசாஸ்த்ர்யம் சொல்லுகிறேமென்பதை நிதர்சநமாக்கி வாதிக்கவெழுந்தால் ஸகல திவ்யப்ரபந்தங்களையும் ஏகப்ரபந்தமாகவே கொள்ள வேண்டிவரும்.

### — திவ்யஸூரிசரித ஸூக்திப்ரதர்சநம் —

8. எம்பெருமானுருடைய திவ்யாஜ்ஞையால் திருவவதரித்த கருடவாஹநபண்டிதப்ரணீதமான திவ்யஸூரிசரிதத்திலும் ஐந்தாவது ஸர்க்கத்தில் 70, 71, 72 சுலோகங்களில் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் தனித்தனிப் பிரபந்தங்களென்பது நன்கு காட்டப்பட்டுள்ளது. ஆக, "திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் முதற்பதிகம்" என்னும் கூற்று ஸர்வாத்மநா அஸம்ப்ரதாயமென்று முடிந்தது. அத்யந்தம் அஸங்கதமானவிதனை தேசிகனுடைய மதமாகச் சொல்லுவது சிறிதும் தகாது. 'பிரபந்தஸாரம் இப்படி தெரிவிக்கிறது' என்றுல், அதை யாரும் இல்லை செய்யவில்லை. அஸங்கதார்த்தமென்று மூதலிக்கப்பட்டவிதனைக் கொண்டிருக்கின்ற அந்த ப்ரபந்தம் விவேகியான வொரு ஆசாரியருடைய நூலாக இருக்க ப்ரஸக்தியே கிடையாதென்பது திண்ணம்.

---

## திருமங்கையாழ்வாருடைய திவ்யஸூக்தி விமர்சம்

### — திருநெடுந்தாண்டகமே சரமப்ரபந்தமென்பதுபற்றி —

9. *மாறன்பணித்த தமிழ்மறை நான்குக்கும் ஆறங்கங்கூற அவதரித்தவரான திருமங்கையாழ்வாரருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களாறில் எது சரமப்பிரபந்தம்? எது சரமப்பிரபந்தமாக இருக்கத்தகுதியுடையது? என்பதைச் சிறிது ஆராய்வோம். இவ்வாறு பிரபந்தங்களின் அடைவுபற்றி ஆராய்வதற்கு முன்னே ஒரு விஷயம் தெரிவிக்கலாகிறது. ஆழ்வார்களின் பௌர்வாபர்யத்தில் வைஷ்ணவேதரர்கள் இன்னமும் விவாதப்பட்டுக் கொண்டு வேறுபாடாகவே யெழுதி வருகிறுர்கள். இதுபோலவே பிரபந்தங்களின் பௌர்வாபர்யத்திலும் விவாதப்படுவாருளர். அன்னவர்களைப்பற்றி

நமக்கு விசாரமில்லை. வடமொழி வேதத்திற்கு வியாஸர்போல நமது தென்மொழி வேதத்திற்கு ஸ்ரீமந்நாதமுனிகள் பரிஷ்காரகர் என்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். அப்பேராசிரியர்தாம் திவ்யப்பிரபந்தங்களை ஸாக்ஷாத்கரித்து ஸம்பாதித்தவர்; ஆழ்வார்களின் வரிசைக்கிரமத்தையும் திவ்யப்பிரபந்தங்களின் வரிசைக்கிரமத்தையும் தததநுபந்திகளான விஷயங்களையும் உபதேசித்தருளினவரும் அவரே. "இதமகிலதம:கர்சநம் ந: தர்சநம் நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம்" என்றருளிச்செய்த தேசிகனுடைய திருவுள்ளத்தில் இவ்விஷயமும் உறைந்ததேயாகும். இதைப்பற்றின விரிவை அந்யத்ர காண்க.

### — ஸ்ரீமந்நாதமுனிகளின் பரிஷ்காரப்ரணாளிகள் —

10. திருப்பல்லாண்டானது திவ்யப்பிரபந்தங்களுள் பதினோராவதாக இருக்கச்செய்தேயும் அதனை முதற்பிரபந்தமாக வைத்தருளினவர் நாதமுனிகளேயாவர். இன்னின்ன பிரபந்தங்கள் சேர்ந்து முதலாயிரம், இன்னின்ன பிரபந்தங்கள் சேர்ந்து இரண்டாவதாயிரம் ..........இத்யாதி வ்யவஸ்தைகளைச் செய்தருளினவரும் அவ்வாசிரியரேயாவர். மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து முதலாழ்வார்களென்று பெயர்பெற்ற பொய்கைபூதம் பேயாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களை முதலிலே வைத்திடவேண்டியது ப்ராப்தமாயிருக்க அவற்றை மூன்றுவதாயிரத்திலே கொண்டு சேர்த்தது, திருமழிசையாழ்வாருடைய இரண்டு திவ்யப்ரபந்தங்களில் ஒன்றை முதலாயிரத்திலும் மற்றொன்றை மூன்றுவதாயிரத்திலும் சேர்த்தது, அதுதன்னிலும் முதற்பிரபந்தத்தை முதலாயிரத்திலே சேர்க்காமல் மூன்றுவதாயிரத்திலே சேர்த்தது, இரண்டாம் பிரபந்தத்தைக் கொணர்ந்து முதலாயிரத்திலே சேர்த்தது, நம்மாழ்வார் பிரபந்தங்களையும் திருமங்கையாழ்வார் பிரபந்தங்களையும் பிரித்துப்பிரித்து வெவ்வேறுயிரங்களிலே சேர்த்தது........ஆக இத்தகைய விபாகங்களைப் பலவகைப்பட்ட ஔசித்யங்களை நோக்கி ஸ்ரீமந்நாதமுனிகள் தாமே செய்தருளினபடியாலன்றோ இவற்றில் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் எவ்விதமான பிறழ்வும் நேராமலுள்ளது.

### ப்ராஸங்கிகமாகத் திருச்சந்தவிருத்தத்தின் சரமப்ரபந்தத்வ நிரூபணம்

11. 'திருமழிசைப்பிரானுடைய திருச்சந்தவிருத்தம் முதலாயிரத்திலே சேர்க்கப்பட்டிருப்பதனால் அவ்வாழ்வாருடைய இரண்டு பிரபந்தங்களுள் இதுவே முதற்பிரபந்தமாக இருக்கத்தகும்' என்று சிலர் கூறினால் 'அப்படியுமிருக்கலாம்' என்றோ 'அதுதான் பொருத்தமானது' என்றோ சொல்லக்கூடியவர்கள் சிலரோ பலரோ இருந்தாலும், ஸம்ப்ரதாய பரம்பரையை ஔசித்யத்தோடுங்கூடவுணர்ந்தவர்கள் எப்போதும் நிலைதளும்புவதில்லை. நான்முகன்

திருவந்தாதியில் ஆழ்வார் தாம் பேறுபெற்றபடியைச் சொல்லிற்றிலர்; அதுதன்னைத் திருச்சந்தவிருத்தத்திலே சொல்லியுள்ளார்; முடிவில் இரண்டு பாசுரங்களிலும் அது சொல்லப்பட்டுள்ளது. (119) *பொன்னிசூழரங்கமேய பாசுரத்தில் *என்னதாவி........உன்ன பாதமலர் மன்னவந்து பூண்டு வாட்டமின்றி யெங்கும் நின்றதே* என்றும், அதற்கடுத்த பாசுரத்தில் (120) *மயக்கினான்தன் மன்னு சோதி ஆதலாலென்னாவிதான் இயக்கெலாமறுத்து அறாத வின்பவீடு பெற்றதே* என்றும் அருளிச்செய்திருக்கக் காண்கையாலே இதுதான் சரமப்ரபந்தமாயிருக்கவடுக்கும் என்று விவேகசாலிகள் நிர்ணயிக்கக் குறையில்லை. ஸ்ரீமந்நாதமுனிகள் திருவுள்ளம்பற்றினதும் இந்த ஔசித்யமேயாம். ஏவஞ்ச, திருச்சந்தவிருத்தம் முதலாயிரத்தில் சேர்ந்திருப்பதனாலேயே அதற்கு முதன்மை வந்துவிடாதென்று அறியலாகும். இனி அடுத்த விஷயம் அவதேயம்.

### — திருநெடுந்தாண்டகத்தின் சரமப்ரபந்தத்வஸ்தாபநம் —

12. இந்தரீதியிலே திருமங்கையாழ்வாருடைய திவ்யப்பிரபந்தங்களாறனுள் திருநெடுந்தாண்டகம் இரண்டாவதாயிரத்தில் சேர்ந்திருந்தாலும் அதுவே சரமப்பிரபந்தமாகும். *என்னில் அங்கமெல்லாம் வந்தின்பமெய்த எப்பொழுதும் நினைந்துருகியிருப்பன் நானே* என்று பேரின்ப வெள்ளமாகத் தலைக்கட்டியுள்ளவதனைச் சரமப்ரபந்தமாகக் கொள்ளாமல், ஆழ்வார் பேறு பெறாத கிலேசத்தினால் எம்பெருமானைப் பழித்துக் கொண்டு தெருவேற மடலூர்வேன் என்று ஸ்வப்ரபந்த ஸமாப்திபண்ணினார் என்று எழுதிவைக்க ஆசார்ய பீடத்திலமர்ந்தவர்கள் நெஞ்சாலும் நினையார்கள். நம்மாழ்வார் அவாவற்று வீடுபெற்றமை சொல்லித் தலைக்கட்டினவாறு போலத் திருமங்கையாழ்வாரும் அங்ஙனே தலைக்கட்டினதான திருநெடுந்தாண்டகம் தவிர மற்றொன்று சரமப்ரபந்தமாயிருக்க என்ன ஔசித்யமுள்ளது. திருமங்கையாழ்வாருடைய பிரபந்தத்தைச்சாத்துமுறை செய்யும்போது எங்கும் நியமேந திருநெடுந்தாண்டகமும் சாத்துமுறை செய்யப்பட்டுவருவது அபலபிக்க முடியாத தொன்று. பிரபந்தஸாரகாரருடைய கொள்கையின்படி இது மூன்றாவது பிரபந்தமாயிருந்தால் இதனை எதற்காகச் சாத்துமுறை செய்வதென்று சற்று விமர்சிக்கவேணுமே. விமர்சித்தால், இது த்ருதீய ப்ரபந்தமன்று, சரமப்ரபந்தமே யென்பது பக்ஷபாதிகளுக்குங் கூட மறுக்க வொண்ணாதபடி மதிக்கப்படும்.

### — ஒரு ரஸ்யரஹஸ்யார்த்தப்ரகாசனம் —

13. திருநெடுந்தாண்டகமே சரமப்ரபந்தமென்பதற்கு மிகச்சிறந்ததொரு நிதானமுண்டு. திருமங்கையாழ்வார் ஸர்வப்ரகாரங்

களாலும் நம்மாழ்வாரை யடியொற்றி யருளிச்செய்பவரென்பது ஸம்ப்ரதாயத்தலைவர்களனைவர்க்கும் ஸம்ப்ரதிபந்நமானது. நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தையிலே ஒரு வியாமோஹமுண்டாயிற்று. *சூழ்ந்து நின்றமால் விசும்பில் தொல்லைவழிகாட்ட, ஆழ்ந்ததனை முற்றுமநுபவித்து, வாழ்ந்தங்கடியருடனேயிருந்தவாற்றையுரை செய்த தான *சூழ்விசும்பணிமுகில் திருவாய்மொழியிலே நிலவுலகத்தின் நினைவு வருவதற்கு ப்ரஸக்தியே கிடையாது. அப்படியிருந்தும் அப்பதிகத்தில் திருக்குடந்தையைப்பற்றி ஆச்சரியமாகப் பேசியுள்ளார் நம்மாழ்வார். எங்ஙனே பேசியுள்ளாரென்னில்; (7) *மடந்தையர் வாழ்த்தலும்........குடந்தையெங்கோவலன் குடியடியார்க்கே* என்னும் அந்தப்பாசுரத்திற்கு அடியேனுடைய திவ்யார்த்த தீபிகை யுரை வாக்கியங்கள் சிலவற்றை ஈண்டெடுத்துக் காட்டுகிறேன்;

“வழியில் ஆதரிப்பவர்களெல்லாரும் என்னவென்று சொல்லியாதரிக்கிறார்களென்னில்; [குடந்தை யெங்கோவலன் குடியடியார்க்கே தோத்திரஞ் சொல்லினர்] இவர்கள் திருக்குடந்தைப் பெருமானிடத்திலே குடிகுடியாக அடிமைப்பட்டவர்களென்று சொல்லிக்கொண்டு ஆதரிக்கிறார்களாம். இதனால் நம்மாழ்வாருக்குத் திருநாட்டிலுங்கூட மறக்கமுடியாதபடி திருக்குடந்தைப்பதியின் அநுபவம் செல்லாநின்றதென்று தெரியவரும். திவ்யப்பிரபந்தமெல்லாம் லோபமடைந்திருந்த வொரு காலவிசேஷத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் அவற்றைப் புநருத்தாரம் செய்வதற்குத் திருக்குடந்தைப் பதி விஷயமான *ஆராவமுதேயென்கிறபதிகமே மூலகாரணமாயிற்றென்று ஐதிஹ்யமுள்ளது. த்ரிகாலஜ்ஞான ஆழ்வாரது திருவுள்ளத்தில் இது முன்னமே படிந்திருந்ததனால் இதையிட்டு இங்கு திருக்குடந்தைப் புகழ்ச்சி ப்ராப்தமாயிற்று என்றுணர்க. திருமங்கையாழ்வார் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தையே பின்பற்றிப் பேசுபவராதலால் நம்மாழ்வாருக்குத் திருக்குடந்தையில் அளவுகடந்த அபிநிவேச முண்டென்பதையறிந்தே தாம் திருமொழிபாடத் தொடங்கும் போதே *தூவிசேரன்னம் துணையொடும் புணரும் சூழ்புனற் குடந்தையே தொழுது* என்றும், *சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின் சூழ்புனற் குடந்தையே தொழுமின்* என்றும் அருளிச் செய்து, சரமப்பிரபந்தமாகிய திருநெடுந்தாண்டகத்தின் முடிவிலும் *தண்குடந்தைக் கிடந்தமாலை நெடியானை யடிநாயேன் நினைந்திட்டேனே* என்று திருக்குடந்தையையே பேசித் தலைக்கட்டினார். அன்றியும் திருக்குடந்தைக்கென்றே தனிப்பிரபந்தமுமொன்று [திருவெழுகூற்றிருக்கை] திருவாய் மலர்ந்தருளினார்.”

என்னுமிவை தீபிகையுரைவாக்கியங்கள். முப்பதாண்டுகட்கு முன்னமே இத்தத்துவம் அடியேனால் நிரூபிக்கப்பட்டுள்ளதென்கைக்காக

திவ்யார்த்ததீபிகைவாக்கியங்களை இங்கெடுத்துக்காட்டினபடி. திருநெடுந்தாண்டகமே சரமப்பிரபந்த மென்பதற்கு இது அசைக்கவொண்ணுத நிரூபகம். நம்மாழ்வார் திருக்குடந்தையைச் சொன்ன பிறகு வேறுதிருப்பதியைச் சொல்லாமல் பேறுபெற்றுர். திருமங்கையாழ்வார் திருக்குடந்தையிலே தொடங்கித் திருக்குடந்தையிலே தலைக்கட்டினுர் என்கிற இந்த ரஸ்யரஹஸ்யார்த்தம் பரம்பரையிற் படியாது இடையிலே ஸ்பர்த்தைக் கென்று வந்துபுகுந்தவர்களுக்குத் தெரியவழியேது? தெரிவித்தாலும் எதிரம்புகோப்பதே!

## — பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானஸரணிப்ரதர்சனம் —

14. இவ்வளவு உபபத்திகளையும் திருவுள்ளம்பற்றியே பெரியவாச்சான்பிள்ளை திருநெடுந்தாண்டக வியாக்கியானப்ரவேசத்தில் பெரிய திருமொழிக்கும் திருக்குறுந்தாண்டகத்திற்கும் ஸங்கதியிட்டருளி, திருக்குறுந்தாண்டகத்திற்கும் திருவெழுகூற்றிருக்கைக்கும் ஸங்கதி காட்டி, திருவெழுகூற்றிருக்கைக்கும் திருமடல்களுக்கும் ஸங்கதி காட்டி, திருமடலுக்கும் திருநெடுந்தாண்டகத்திற்கும் ஸங்கதி காட்டி அதனையே சரமப்ரபந்தமாக நிகமித்தருளினுர். திருநெடுந்தாண்டகம் சரமப்ரபந்தமாக வன்றிக்கே இடைப்பிரபந்தமாக இருக்குமாகில் திருமடல்களவதரிக்க ப்ரஸக்திலேசமு மில்லையாகு மன்றே. பேறுபெற்றுத் தலைக்கட்டினபிறகு மடலூர்வதற்கு ப்ரமேயமுண்டோ? கேவலம் தம்முடைய கவிதாசாதுர்யத்தைக் காட்டுதற்கென்றே திருமடல்களைப் பாடினுரென்றுதானே சொல்லலாகும்.

## — பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்தின் ஏற்றம் —

15. இங்கு முக்கியமான விஷயம் ஒன்றே. திருமங்கையாழ்வாருடைய பிரபந்தங்களில் எது சரமப்பிரபந்தமென்று விசாரங் கொள்ளவேண்டிய ப்ரஸக்தி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கிடையாது. 'துடுப்பிருக்கக் கைவேகவேணுமே?' என்கிற கதையாக இந்த விசாரம் நமக்கேதுக்கு? வேதத்தில் "ப்ரஜாபதேர்ஹ்ருதயேந" என்றொரு வாக்குள்ளது. இது ஒருபதமா? இரண்டுபதமா? என்கிற விசாரம் ஸாமான்ய ஜனங்களுக்கு உண்டாக ப்ரஸக்தியில்லை. வைதிகர்களுக்கு உண்டானுல் பதபாடம் எப்படியுள்ளது? என்று பார்க்கவேண்டியது கடமையேயல்லது தாமாக வொன்று ஆலோசித்து முடிவுசெய்ய வொண்ணுமோ? ஒண்ணுது. அதுபோல இங்கு பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்தால் திருநெடுந்தாண்டகம் சரமப்பிரபந்தமாகத் தேறுகின்றதா இல்லையா? என்பதுதான் பார்க்கவேண்டியது. அங்ஙனம் தேறுகின்றதில்லை யென்று வாய் திறக்க வழியில்லை. "பெரியவாச்சான் பிள்ளை திருநெடுந்தாண்டகத்தை சரமப்பிரபந்தமாக வைத்துத்தான் வியாக்கியானித்தருளி

ஞர்" என்று ஒப்பவேண்டியதாயிற்று. ஆக, இதற்கு மாருகச் சொல்லிப் பிரபந்தசாரமென்று ஒன்றெழுத முன்வருபவர் வேதாந்த தேசிகனுக இருக்கமுடியாது என்பது சபதம் செய்து சொல்லத் தக்கது. மற்றும் பல ஹேதுக்களில் இது தலையான ஹேது.

## ஸ்ரீவைஷ்ணவர்களுள் இதில் அபிப்ராய பேதப்ரஸக்தியில்லாமை

16. ஸம்ப்ரதாயார்த்தங்களில் க்வசித் கிஞ்சித் அபிப்ராய பேதமுளதென்னு மளவால் இத்தகைய விஷயங்களிலும் அபிப்ராய பேதமுண்டாக அவகாசமே கிடையாது. முதலாழ்வார்களின் பிரபந்தங்களிலும் திருமழிசைப்பிரான் திருப்பாணுழ்வார் பிரபந்தங்களிலும் திருவாசிரியம் பெரிய திருவந்தாதிகளிலும் திருவெழுகூற்றிருக்கை திருமடல்களிலும் ஆக பதினெரு பிரபந்தங்களில் இவற்றுக்குக் கர்த்தா இன்னுரென்று சிறிதும் காட்டப்பட்டிருக்கவில்லை; அப்படியிருந்தும் கர்த்தாக்களை வேறுபடுத்திச் சொல்லும் ஆஸ்திக ஸ்ரீவைஷ்ணவர் ஒருவருமில்லை. இத்தகைய அனேக விஷயங்களில் பரம்பராப்ராப்தமான உபதேசங்களையே நம்முன்னேர்கள் நிதியாகக் கொண்டு வந்திருக்கிருர்கள். இவற்றில் ஆசார்ய பீடஸ்தர்களிலொருவரும் அபிப்ராய பேதம் காட்டினதுமில்லை, கொண்டதுமில்லை. தேசிகன் கொண்டாரென்னில் நாக்கு வேம்; வாய் புழுக்கும்.

## — முக்கியமான இரண்டுவிஷயங்களின் ப்ரதிஜ்ஞை —

17. பெரியவாச்சான் பிள்ளை திருநெடுந்தாண்டகத்தைச் சரமப்பிரபந்தமாகக் கொண்டிருக்கிருரா? அல்லது த்ருதீயப்ரபந்தமாகக் கொண்டிருக்கிருரா? என்பதை தேசிகன் ஆராயமாட்டாதவரல்லர். அவருடைய வியாக்கியான ஸ்ரீஸூக்திகளையே அல்லும்பகலும் சிந்தனை செய்துகொண்டிருப்பவர் தேசிகன்—என்பது இவர்தம்முடைய அநேக ஸ்ரீஸூக்திகளால் தேறின விஷயம். இதனை நாம் நமது பலநூல்களில் விவரித்திருக்கிறேமாயினும் இதனிலும் அடுத்த பரிச்சேதத்தில் விவரிக்கவே போகிறேம். இந்நூலுக்கு அதுதான் உயிர்நிலை.

18. ஸம்பிரதாய விஷயமாக நாமெழுதும் நூல்களுக்கு ஜீவநாடியான விஷயங்கள் இரண்டே;

(1) தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மணவாள மாமுனிகளுக்கும் மேலாகக் கண்டபாடம் செய்திருந்தவர்; அந்த ஸ்ரீஸூக்திகளையே பற்றுக் கோடாகக்கொண்டு எழுதுமவர் தேசிகன்—என்கிறவிது ஒரு விஷயம்.

(2) இவ்வுண்மையை யறிய கில்லாதவர்களாய் (அல்லது) அறிந்தும் அபலபிப்பவர்களான நவீனர்கள் தேசிகனைப் பெரியவாச்சான்

பிள்ளைக்கு விரோதியாக எழுதுவதும், அந்த தேசிகனோடு தங்களுக்கொரு தொடர்பு இருப்பதாக அபிநயிப்பதும் மிகத்தவறு-என்கிற விது மற்றொரு விஷயம்.

உயிரான இவ்விரண்டு விஷயங்களிலும் இந்த நவீனர்கள் அணுமாத்திரமும் மறுப்புரைத்தவர்களல்லர்; உரைக்க சக்தருமல்லர். இது இருபத்தைந்து வருஷகாலமாகக் கல்வெட்டும் செப்பேடுமாக விளங்கி வருகின்றது. இனியும் திங்களுமாதித்தியனுமுள்ளவரை விளங்குமென்பதில் ஸந்தேஹலேசமுங் கிடையாது.

## — தேசிகனுடைய யதார்த்தஜ்ஞானவைபவம் —

19. ப்ரக்ருதவிஷயத்தில்—திருநெடுந்தாண்டகத்தைச் சரமப் பிரபந்தமாகவே பெரியவாச்சான் பிள்ளை கொண்டிருக்கிறாரென்பதில் தேசிகனுக்கு அஜ்ஞானமோ அந்யதாஜ்ஞானமோ கல்பிக்கமுடியாது. இங்குப் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்தை தேசிகன் ஏற்றுக் கொள்ளாமல் புறக்கணித்துவிட்டார் என்று இந்தநவீனர்கள்சொல்ல வேண்டும். இது ஸூர்யசந்திரர்கள் மேற்கே தெற்கே உதித்தாலும் ஸங்கதமாகக் கூடிய வார்த்தையன்று. அப்படி புறக்கணிப்பதானால் தேசிகன் தகுந்த உபபத்திகளைக்காட்டியே புறக்கணிப்பர். ஒரு உபபத்தியும் காட்டவில்லை, காட்டவும் முடியாது. ஆக இதனாலும் பிரபந்தசாரம் ஒரு வழிப்போக்கர் கல்பனை செய்ததென்பது கல்வெட்டாகும். நம்முடைய இந்த நிஷ்கர்ஷத்திற்குச் சார்பாக, தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை நிதியாகக் கொண்டவர் என்பதை நிரூபிப்பது ஆவச்யகமாகும். அதுவே இந்நூலுக்கு ஜீவநாடியென்று தெரிவித்துமிருக்கிறோமாதலால் அதனை இந்நூலின் இரண்டாம் பரிச்சேதமாக வைப்போம். பிரபந்தசாரம் தேசிகக்ருதியன்று என்பதற்கு மற்றொருமுக்கியமான நிரூபகம்தெரிவிப்போமினி.

## — திருமடல்களைப் பலபாட்டுக்களாகப் பகுக்கும் விஷயம் —

20. திருமங்கையாழ்வாருடைய நான்காவது ஐந்தாவது பிரபந்தங்களாகிய திருமடல்களிரண்டும் தனித்தனியே ஒவ்வொரு பாட்டுக்களென்பதையறிவதற்கு அதிகமான படிப்பு அநபேக்ஷிதம். திருவெழு கூற்றிருக்கை ஒரே பாட்டு என்பதில் எப்படி ஒருவர்க்கும் விவாதமில்லையோ அப்படியே சிறிய திருமடலும் ஒரேபாட்டு என்பதிலும் யார்க்கும் விவாதமிருக்க ப்ரஸக்தியில்லை. ?காரார் வரைக் கொங்கை* என்று தொடங்கி *வாரார் பூம்பெண்ணை மடல்* என்று தலைக்கட்டுமளவும் ரகரவெதுகை யொன்றேயிட்டு அமைத்த சிறிய திருமடலையும், *மன்னிய பல்பொறி சேர்* என்று தொடங்கி மன்னிய பூம்பெண்ணை மடல்* என்று தலைக்கட்டுமளவும் னகர

வெதுகை யொன்றேயிட்டு அமைத்த பெரிய திருமடலேயும் பலபாட்டுக்களாகப் பிரித்தவர் ஆசார்ய பீடஸ்தராக ஒருவருமில்லை.

21. நாற்சீர்கொண்ட மூன்றடிகளும், முச்சீர்கொண்ட ஈற்றடியுமாக முடிவது வெண்பா; இரண்டடியால் வருவது குறள்வெண்பா; மூன்றடியால்வருவது சிந்தியல்வெண்பா; ஐந்தடிமுதல்பன்னிரண்டடியளவும் வருவது பஃறொடை வெண்பா; பன்னிரண்டடிக்கு மேற்படின் கலிவெண்பா-என்றிங்ஙனே யாப்பிலக்கண நூல்களில் கூறப்பட்டுள்ளதை நாம் நமது திவ்யார்த்ததீபிகையுரையில் மிகவிரிவாக விளக்கியிருக்கின்றோம். சங்கத்துச் சான்றோரியற்றிய பன்னிருபாட்டியலென்னுமிலக்கண நூலில் இனவியலில் மடலிலக்கணஞ் சொன்னவிடத்து "இவ்வாறு வந்தன மங்கையர் கோனருளிச்செய்த பெரிய திருமடல் சிறியதிருமடல் என்பன" என்று விவரணம் காட்டியிருக்கின்றார்கள். "ஆகவே திருமடல்களைப் பல பாட்டுக்களாகப் பிரித்தல் இலக்கண முறைமைக்கு எவ்வகையாலும் இணங்காது" என்று முடித்திருக்கின்றோம்.

— திருமடலைப்பற்றி இருவரெழுதியிருப்பவற்றைக் காட்டுதல் —

22. நாமெழுதியிருந்ததைக்கண்டவர்களிலொரு ஸஹ்ருதயர்,

"திருமடல்களிரண்டும் கலிவெண்பாவில் அமைந்ததனால் தமிழிலக்கணத்தின்படி ஒவ்வொரு பிரபந்தத்தையும் ஒவ்வொரு பாட்டாகக் கொள்ளவேண்டுமென்பர். ஸ்வாமி ஸ்ரீதேசிகன் முன்னதை 40 பாசுரமாகவும் பின்னதை 78 பாசுரமாகவும் கணக்கிட்டு உறுதிப் படுத்தி விட்டமையால்........சாந்தஸமென்றும் ஆர்ஷமென்றும் சில வற்றைக் கொள்வதுபோல் இங்குங் கொண்டு வாளாவிருப்போம்" என்றார்.

23. மற்றொரு ஸஹ்ருதயர்,

"திருமடல்களிலுள்ள பாசுரங்களைப் பலர் பலவாறாகக் கணக்கிடுகிறார்கள். சிலருடைய அபிப்ராயத்தில் ஒவ்வொருவரியும் ஒரு பாசுரம். வேறு சிலர் அபிப்ராயத்தில் இரண்டுவரிகள் சேர்ந்து ஒரு பாசுரம். ஸ்வாமி தேசிகன் இவ்விரண்டு பக்ஷங்களையும் அங்கீகரிக்கவில்லையென்று தெரிகிறது. சிறிய திருமடலில் 40 பாட்டுக்களும் பெரிய திருமடலில் 78 பாட்டுகளும் இருப்பதாக [ப்ரபந்த சாரத்தில்] காட்டினர். இதைப் பரிசீலனம் செய்து 40 கண்ணிகளைச் சிறிய திருமடலிலும் 78 கண்ணிகளைப் பெரிய திருமடலிலும் கண்டு அநுபவிக்க ப்ராப்தம். இன்றைக்கும் ஆலயங்களில் ஸேவாகாலம் நடக்கும்போது இந்த முறை தழுவப்

பட்டுவருகிறது. இவ்வகையில் சிறிய திருமடலை 40 பாசுரங்களாகவும் பெரிய திருமடலை 78 பாசுரங்களாகவும் பிரித்து அச்சிட்டுக் காட்டவேண்டிய கடமை இக்காலத்தவர்க்கு உள்ளது. விரைவில் அப்படிப்பட்ட பதிப்பு ஒன்று வெளிவரப்போவதாகக் கேட்டு மகிழ்ச்சியுறுகிறோம்" என்கிறார்.

### — இவ்விருவருடையவும் மருளை மாய்ப்போமினி —

24. பிரபந்த சாரத்தினுட்புகுந்து நாம் ஆராய்ச்சி செய்ய அவகாசம் பெறாத காலத்தில் நாம் எழுதியிருந்தவற்றை இவ்விருவரும் ஆதரித்திருக்கின்றார்கள். முதன்முதலாக நாம் திருமடல் திவ்யார்த்ததீபிகை யெழுதிவெளியிட்டது 1927-ஆம் ஆண்டில். அது இற்றைக்கு 33 வருடமாகிறது. அப்போது பிரபந்தசாரம் தேசிகனுடையது என்று நவீனர்கள் சொல்லிக்கொண்டிருந்ததில் அநுபபத்தி தோன்றப் பெருமையினாலுண்டான நம்பிக்கையினால் திருமடல்களைத் தேசிகன் பல பாசுரங்களாகப் பிரித்திருக்கிறாரென்று உதாஹரித்தோம். இரண்டு மூன்று வருடங்களுக்கு முன்பு சிறிது ஆராய்ச்சி செய்யப்ரஸக்தியேற்பட்டதனால் 'இது தேசிகனுடைய க்ருதியன்று' என்றும், 'நவீனர்கள் திவ்யப்ரபந்த கோஷ்டிகளில் கலந்து சிலபல சேஷ்டைகள் செய்ய ஆரம்பித்தபோது கல்பனைகள் செய்தவற்றில் இதுவும் ஒன்று' என்றும் நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கலாயிற்று. அப்போது நம்முடைய திருமடல் திவ்யார்த்த தீபிகை மறுபதிப்புச் செய்யத்தொடங்கியிருந்ததனால் அதில் பிரபந்தஸாரம் தேசிகக்ருதியென்றென்பதை ஸம்க்ஷேபமாகத் தெரிவித்திருக்கிறோம். அதாவது, 1927-ல் அச்சிட்ட திருமடல் தீபிகை முன்னுரையில் (பக்கம் 12-ல்) வேதாந்த தேசிகன் திருமடல்களைப் பலபாட்டுக்களாகப் பிரித்ததாய் எழுதினதை நீக்கி 1957-ஆம் வருஷத்து மறுபதிப்பில் (பக்கம் 22-ல்) பிரபந்த ஸாரகாரர் என்றே இரண்டிடங்களில் திருத்தி வெளியிட்டுள்ளோம். அப்போது அங்கு விவரித்தெழுத ஆவச்யகதை தோன்றவில்லை. இன்னமும் ஆராய்ச்சி செய்வோமென்கிற எண்ணமே கொண்டிருந்தோம். இதுநிற்க. இதன் சேஷத்தைப் பின்னால் பூர்த்தி செய்வோம்.

### திருமடல்களைப் பலபாட்டாகப் பிரித்தல் ஆசார்யர்களுக்கு அபிமதமன்றென்று விவரித்தல்

25. மணவாளமாமுனிகளீறாகவுள்ள பூருவாசாரியர்களில் ஒருவர்கூடத் திருமடல்களைப் பலபாட்டாகப் பிரித்தது கிடையாது. திவ்யப்பிரபந்தங்களுக் கெல்லாம் வியாக்கியான மருளிச் செய்த பெரியவாச்சான்பிள்ளை ஆங்காங்கு நியமேந முதற்பாட்டு, இரண்டாம்பாட்டு, மூன்றாம்பாட்டு என்றிப்படியே இட்டிருக்கிறார். திருமடல் வியாக்

கியானத்தில் அதுகிடையாது. திருமாலை திருச்சந்தவிருத்தம் திருவந்தாதிகள் திருவிருத்தம் ஆகிய இவற்றிலுங்கூட முப்பதாம்பாட்டு, நாற்பத்தேழாம் பாட்டு, தொண்ணூற்றெட்டாம் பாட்டு என்றிப்படியிட்டு வியாக்யானம் செய்தருளியிருப்பவர் திருமடல்களில் அங்ஙனமிடாது க்ரமேண ப்ரதீகதாரணம்மட்டும் செய்தருளி வியாக்கியானித்திருப்பதனால் திருமடல்களைப் பலபாட்டுக்களாகக்கொள்ளுங் கொள்கை பூருவாசாரியர்களில் ஒருவர்க்குமிருந்ததில்லை யென்று அறுதியிடத் தட்டில்லை. ஸன்னிதிகளில் ஸேவாக்ரமம் ஏகரீதியாக இல்லை. வடமொழி வேதத்திலுங்கூட மூன்றுமஷ்டகத்தில் *அஞ்ஜந்தி ப்ரச்நத்தில் ஸ்மார்த்த வைஷ்ணவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்குள்ளும் பாராயணக்ரமத்தில் வேற்றுமையிருப்பது காணாநின்றோம். தைத்திரீயாரண்யக பாஷ்யத்தில் வித்யாரண்யர் த்ராவிடபாடம், ஆந்த்ரபாடம் என்று வாசி காட்டுகிறார்.

### — ப்ரக்ருத விஷயத்தில் ருஜுவான நிதர்சனங்கள் காட்டுதல் —

26. திவ்யப்ரபந்தங்களிலேயே கேண்மின். திருப்பல்லாண்டு தொடக்கத்தில் இரண்டு பாட்டுக்களை ஒரேபாட்டாக வைத்து முதற்பாட்டை முன்னடியாகவும் இரண்டாம்பாட்டை (முதற்பாட்டின்) பின்னடியாகவும் ஸேவித்து வருவது நியமேந எங்குங் காண்பது. இதனால் இரண்டுபாட்டுக்கள் ஒருபாட்டாக ஆய்விட்டதோ? பெரிய திருமொழியில் ஆரம்பத்தின் முதற்பதிகம் *வண்டுணு நறுமலரிண்டை கொண்டு* இத்யாதி. இப்பதிகத்தில் இறுதிப்பாட்டு *பூமருபொழிலணி விண்ணகர்மேல், காமருசீர்க்கலிகன்றி சொன்ன, பாமருதமிழிவை பாடவல்லார், வாமனனடியிணை மருவுவரே* என்பதனை ஸேவிக்கும்போது எவ்விதமாக ஸேவிக்கிறோமோ அவ்விதமாகவே மற்ற ஒன்பது பாசுரங்களையும் ஸேவிக்கவேண்டும். ஆனால் ஸேவாக்ரமம் அப்படியில்லை.

27. அங்கு திவ்யார்த்த தீபிகையில் நாம் எழுதியிருப்பதாவது,

"இத்திருமொழி வஞ்சிவிருத்தத்தினாலமைந்தது; இறுதிப்பாட்டொழிந்த ஒவ்வொரு பாட்டிலும் *ஆண்டாயுன்னைக் காண்பதோர் ........விண்ணகர்மேயவனே* என்ற அளவடியிரண்டும் தனிமகுடம். இதனையுணராமல் ஒவ்வொருபாட்டும் இரண்டடிகளென்றும் *ஆண்டாயுன்னை யித்யாதியான இரண்டடிகள் சேர்ந்து நான்கடியாகின்றதென்றும் பலர் கருதுவது பொருந்தாது. அத்யாபகர்கள் நான்கடிகளை இரண்டடியாகக்கொண்டு இயல்ஸேவித்து வருவது முன்னோர்முறை" என்று.

**—ஸேவாக்ரமத்தைக்கொண்டு இலக்கணநெறியை மீறலாகாதென்பது—**

28. ஸேவாகாலக்ரமங்கள் எப்படியிருந்தாலும் இலக்கண வரம்பு சிதையாது. திருவெழுகூற்றிருக்கை சிறிய பிரபந்தமாயிருத்தலால் அதை இருமுறை ஸேவித்து விடுகிறுர்கள். திருமடல்கள் அங்ஙனம் ஸேவிக்க இயலாததால் இருமடல்களிலும் ஆதியிலும் அந்தத்திலும் ஸ்வல்பபாகம் இரட்டித்து ஸேவித்து வருகிறுர்கள். அதனுல் பிறர்க்கு யாதொரு லாபமும் ஸித்தியாது. திருவெழுகூற்றிருக்கையில் *செல்வம்மல்கு தென்திருக்குடந்தை* என்கிற ஒரு வாக்கியத்தையும், திருமடல்களில் *ஆராமஞ்சூழ்ந்தவரங்கம்* என்பது போன்ற சில வாக்கியங்களையும் அவ்வோ திவ்யதேசாபிமானிகள் இரட்டித்துச் சேவித்துவருவது எங்குங்காண்பது. இவற்றுல் என்ன தேறிவிடும்? துண்டுதுண்டான அந்த வாக்கியங்கள் ஒருபாட்டென்று தேறிவிடுமோ? ஒருகாலும் தேருது.

**— முன்னே உதாஹரித்த இருவர் கூற்றின் மறுப்பு முடிவு —**

29. "திருமடல்களைத் தேசிகன் 40 பாட்டாகவும் 78 பாட்டாகவும் பிரித்துவிட்டாராகையாலே நமக்கு விசாரமென்ன?" என்பவர்கள் சிறிதும் விவேகமுள்ளவர்களாகார்கள். அத்யந்தம் அஸம்பத்தங்களான பல விஷயங்கள் மலிந்த ஒரு பிரபந்தத்தை உதறித் தள்ள வேண்டியதுபோய் அப்ராமாணிக விஷயங்களுக்கு அதை ப்ரமாணமாகக்காட்டுவது ப்ராமாணிகர்களின் பணியன்று. சாந்தஸம், ஆர்ஷம் என்னும் வகைகளில் ஸமாதானம் கொள்வது ஆழ்வார்ஸ்ரீஸூக்திகளிலேயே அஸாதுப்ரயோகமிருப்பதாக ப்ரஸ்தாவம் வந்தால் அப்போது ஏற்கும். ஒரு வழிப்போக்கர் உண்மைக்கு மாறுக விபாகங்களைச் செய்துவிட, அதனைச் சாந்தஸமென்றும் ஆர்ஷமென்றும் பொருந்தவிடுகிறேமென்பது அபஹாஸ்யமாகும்.

30. "சிலருடைய அபிப்ராயத்தில் ஒவ்வொருவரியும் ஒருபாசுரம்; வேறு சிலர் அபிப்ராயத்தில் இரண்டுவரிகள் ஒருபாசுரம்" என்றதும் பிசகு. ஒருவரியை ஒருபாட்டாகக் கொள்பவர் ஓரெழுத்தையோ ஒருபதத்தையோ ஒருபாட்டாகக் கொண்டாலும் கொள்ளலாம்; கேள்வியில்லை. இரண்டுவரிகளை ஒருபாட்டாகக் கொண்டவர் பூருவாசாரியர்களில் ஒருவருமிலர். மணவாளமாமுனிகளுக்குப் பிற்பட்டவர் எவர் எது எழுதினுலும் ஔசித்யேஸதி கொள்ளக்கடவதாமத்தனை. திருமடல்களை தேசிகன் 40 பாட்டாகவும் 78 பாட்டாகவும் பொருட்சேர்த்திக்கிணங்கப் பிரித்தார் என்று சொல்லுகிறவர் பொருட்சேர்த்தியைச் சிறிதும் காட்டமுடியாது. அவர்களின் வாய் கொண்டே 'அந்தப்பிரிவு அஸங்கதமே' என்று ஒப்பவைக்கிறேம் காண்மின்.

**—பிரபந்த சாரத்தில் காணும் திருமடற் பாகுபாட்டின் தகுதியின்மை—**

31. சிறிய திருமடலிலுள்ள அடிகளைப் பொருளுக்கிணங்கப் பிரிப்பதானல் பதினெட்டு பகுதியாகப் பிரிக்க முடியுமே யொழிய அதற்கு மேற்படப் பிரிக்க முடியாது. இங்ஙனமே பெரிய திருமடலிலுள்ள அடிகளையும் பொருளுக்குச் சேரப் பிரிப்பதானல் இருபத்தொன்பது பகுதியாக (அல்லது) முப்பத்திரண்டு பகுதியாகப் பிரிக்க முடியுமே யல்லது அதற்கு மேற்படப் பிரிக்க முடியாது. இத்தகைய பிரிவுகளை நாமே செய்து அச்சிட்டுமிருக்கிறோம். நமது திருமடல் திவ்யார்த்த தீபிகையை யெடுத்துப் பார்த்தால் தெரியும். அதில் பொருட் சேர்த்திக்குத் தகுதியாக மூலம் பிரித்துப் பிரித்து அச்சிடப்பட்டிருக்கின்றதைக் காண்க. பதினெட்டு பிரிவுகளுக்கே உரியதான சிறிய திருமடலை நாற்பது பிரிவுகளாகப் பிரிப்பதானல் அந்தப் பிரிவு அஸங்கதமே யென்பதில் என்ன ஸந்தேஹம்? "40 ஆகவும் 78-ஆகவும் பிரித்து ஒருவர் விரைவில் அச்சிடப் போவதாகவும் அதை மகிழ்ச்சியுடன் எதிர் பார்த்திருப்பதாகவும்" எழுதுகிறவர்கள் கண்களை மூடிக்கொண்டு கனவு காணலாமத்தனை.

32. **"அவச்யாயஸ்து நீஹாரஸ் துஷாரஸ் துஹிநம் ஹிமம்"** என்று அமரகோசம். இங்கு 'அவச்யாயஃ, து, நீஹாரஃ, துஷாரஃ, துஹிநம், ஹிமம்' என்று பதச்சேதம். ஒருவர் 'அவச்யாயஸ்து, நீஹாரஸ்து, ஷாரஸ்து, ஹிநம் ஹிமம்' என்று பிரித்தார். இங்ஙனே பிரித்து அச்சிட்டால் அச்சுபடியமாட்டேனென்னுமோ? 'தச—ராமசராஃ' என்பதை 'தசராஃ, மசராஃ' என்று பிரித்தால் பிரியமாட்டேனென்னுமோ? எத்தனையோ அஸம்பத்தங்கள் அச்சேறியிருப்பதுபோல் இவர்கள் ஆவலோடு எதிர்பார்க்கிற அஸம்பத்தமும் அச்சேறினல் வியப்பொன்றுமில்லையே. அப்பதிப்பை நாமும் ஆவலோடு எதிர்பார்க்கிறோம்.

33. பதினெட்டுக்குமேல் ஸ்வரஸமாகப் பிரியமாட்டாத சிறிய திருமடலை நாற்பதாகப் பிரித்தால் காணநேரும் அஸாங்கத்யத்தை இப்போதே நாம் விளக்கிக் காட்டுகிறோம் காண்மின். *பாரோர்களெல்லாம் மகிழப்பறைகறங்க* என்று தொடங்கி*ஆரானுஞ் சொல்லிற்றுங் கொள்ளேன்* என்னுமளவும் நிறுத்திப் பிரித்தால் பொருட்குப் பொருந்தும். இதற்கு மேல் *அறிவழிந்து தீராவுடம்பொடு* என்று தொடங்கினல் பத்து அடிகள் சொன்ன பிறகே பிரிவு ஏற்படும். மேலே மேலே சிலவிடங்களில் 20, 25 அடிகள் சொன்ன பிறகே பிரிவு ஏற்படும். அங்ஙனே பிரிப்பதுதான் பொருட்குப் பொருந்தும். அங்ஙனம் பிரித்தால் (சிறிய திருமடலில்) 18 பிரிவுகளுக்கு மேல் ஏற்படமுடியாதாதலால் இவர்கள் பிடிவாதங்கொண்டு நாற்பதாகப் பிரித்தால் பிரிக்கும்போதே அஸாங்கத்யம் தெற்றென விளங்கித் தீரும். இப்படி அஸங்கதமான பிரிவுகளுடன் ஸேவா காலம் வ்யபதிஷ்டர்கள் செய்வதுமில்லை. சிலர் செய்தால் அது லக்ஷண விருத்தமான பாகுபாட்டுக்கு ப்ரமாணமாகவும் மாட்டாது. இதைப்பற்றி நமது தனி நூலொன்று வெளிவரும்.

**—திருமடல்களைப் பல பாட்டாகப் பிரிக்க அவச்யமே கிடையாது.—**

34. திருமடல்களைப் பல பாட்டுகளாகப் பிரிக்கவேண்டிய ஆவச்ய கதை என்ன வந்திட்டது? என்பதை யன்றோ விவேகிகள் முன்னம் விமர்சிக்கவேண்டும். ஆழ்வார்களெல்லாரும் ஒன்று கூடி 'நாம் நாலாயிரம் பாசுரங்களை ஏற்றக்குறையில்லாமல் இயற்றக்கடவோம்' என்று ஸங்கல்பித்துக் கொண்டு பாசுரங்கள் பாடினதாக இருந்தால் இந்த ச்ரமம் கொள்ளவேண்டும். வெவ்வேறு காலங்களில் அவரவர்கள் பத்தும் நூறும் ஆயிரமுமாய் அருளிச்செய்து போனார்கள். ஸ்ரீமந் நாதமுனிகளின் பரிஷ்காரத்தினால் நாலாயிரமென்கிற வ்யபதேச முண்டாயிற்று. நாலாயிரம் பாட்டுக்களென்று இதற்குப் பொருளன்று, நான்கு ஆயிரமாக வகுக்கப்பட்டதென்பதே பொருள். முதலாயிரம், பெரிய திருமொழியாயிரம், இயற்பா ஆயிரம், திருவாய்மொழியாயிரம்—என்பன நான்கு ஆயிரங்கள். இவற்றில் ஒரு ஆயிரத்திலுங்கூட ஏற்றத்தாழ் வில்லாமல் ஆயிரம் பாட்டுகள் தேறுவது கிடையாது. அங்ஙனே தேறும் படி செய்ய முடியாதபோது திருமடல்களைத் துண்டிப்பதாகிற இந்த வீண் ப்ரயாஸத்தை ஆசார்ய பீடஸ்தரொருவர் கொள்ளுவரோ? ஒரு காலும் கொள்ளார்; கொள்ளவுமில்லை. மணவாள மாமுனிகளுக்குப் பிற்பட்ட வொருவர் செய்ததைப்பார்த்து நவீனர்களில் தலைவர் தாமொன்று செய்ய அது இவ்வளவுதூரம் அலசியெறிய அவச்யமாயிற்று. இதில் இதற்கு மேற்படவும் எழுதுவது ப்ரேதசிரஸி ப்ரஹாரணமாம்.

**—ப்ரபந்த ஸாரத்தின் நவீநத்வே இது காறும் காட்டிய ஹேதுக்களின் நிகமனம்—**

35. ஆக, பூர்வாசார்ய பரம்பராப்ராப்தமான அநவத்ய பத்ததிக்கு விருத்தமாக திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழியோடு சேர்த்து ஏகப்ரபந்தமாக்கியும், உண்மையில் சரம ப்ரபந்தமான திருநெடுந்தாண்டகத்தைத் தள்ளிப் பெரியதிருமடலைச் சரம ப்ரபந்தமாக்கியும், ஒரே பாட்டான திருமடலை மனம்போனபடி பல பாட்டுக்களாக்கியும் பேசியுள்ள பிரபந்தமானது வ்யபதிஷ்டரும் விவேகியுமான ஒரு ஆசாரியருடைய க்ருதியாக இருக்கத் தகவேதகாதென்பதை*ஏதமில்தண்ணுமை யெக்கம் மத்தளி யாழ்குழல் முழவமோடிசைதிசைகெழுமிப் பேசலாம்.

**—ப்ரபந்தஸார பண்டிதர்களின் உபந்யாஸப்ரகாரப்ரதர்சநம்.—**

36. அன்றியும் மிக முக்கியமான மற்றிரண்டு அநுபபத்திகளையுங் கேண்மின். ப்ரபந்தசாரம் என்பதற்கு அர்த்தமே கிடையாதென்பதும், (ப்ர) என்று மெய்யெழுத்தை முற்கொண்ட சொல்வடிவம் அஸங்கதம் என்பதும் அவையாம். இவ்விரண்டையும் அடைவே விவரிக்கிறோம். நவீனர்கள் பலர்கூடிச் சென்றவாண்டில் சென்னை வைகுண்டபெருமாள் ஸந்நிதியில் ப்ரபந்தசாரமென்பதற்குப் பொருத்தமான பொருள் உபந்யஸிக்கவேணுமென்று சில பண்டிதர்களுக்குக் கட்டளையிட்டார்கள். "வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் காலத்திலேயே இந்த விசாரம் விளைந்து வழ

வழ கொழகொழவாய் முடிந்து நின்றதே" என்றாரொருவர். "ப்ரபந்த ஸாரமென்பது பிசகு; ப்ரபந்தசாரம் என்றிருக்கலாம். சாரமாவது ஸஞ்சாரம். ப்ரபந்தங்களின்மேல் ஸஞ்சாரம் செய்வது என்று பொருள் ஒருவாறு கொள்ளலாம்" என்றார் மற்றொருவர். "ப்ரபந்தஹாரம் என்றிருக்கலாம்; பிரபந்தங்களுக்கெல்லாம் இது ஹாரம் போன்ற தென்று ஒருவாறு சொல்லலாம்" என்றார் இன்னொருவர். "ப்ரபந்த நீரம் என்றிருக்கலாம்; ஸ்வாமி தேசிகன் ப்ரபந்தங்களிலே நீர்ப்பண்டமா யுருகிப்போய் ஸாதித்ததாகையாலே இதுதான் யுக்தமான திருநாமம்" என்றார் வேறொருவர். .........இவ்வண்ணமாக ஒவ்வொருவர் ஒவ்வொரு உல்லேகம் சொல்ல த்வங்கார ஹுங்கார வஷட்காரங்களோடே ஸபை கலந்ததென்று ஆப்தர்கள் சொல்லக்கேட்டிருந்தோம். ப்ரபந்தஸாரம் என்றுவைத்து ஸ்வரஸமாகப் பொருள் சொல்லமுடியாதென்றே முடிவா யிற்றும். இதில் என்ன ஸந்தேஹம். எந்த பிரபந்தத்தின் எவ்விதமான ஸாரம் இதிலுள்ளதென்று கேட்டால் மறுவாய்திறக்க முடியுமோ?

**—தேசிகனது உண்மையான ஸாரக்ரந்தங்களின் பொருட்பொருத்தம்.—**

37. தேசிகனுடைய க்ரந்தங்களிலேயே ரஹஸ்யத்ரயஸாரமென்றும் ஸாரஸாரமென்றும் த்ரமிடோபநிஷத் ஸாரமென்றும் சில க்ரந்தங்களுள்ளன. இவற்றின் அர்த்தவிசாரத்தில் யாரும் இறங்கவேண்டிய அவசியமில்லை. ரஹஸ்யத்ரயத்தின் ஸாரப்பொருள்களைக் கொண்டது ரஹஸ்யத்ரயஸாரம்; அந்த ஸாரக்ரந்தத்தின் ஸாரம்கொண்டது ஸார ஸாரம். த்ரமிடோபநிஷத்தான திருவாய்மொழியின் ஸாரம்கொண்டது த்ரமிடோபநிஷத்ஸாரம். மற்றும் அருளாளப்பெருமாளெம்பெருமானார் நடாதூரம்மாள் முதலானோருடைய ஞானஸாரம், ப்ரமேயஸாரம், தத்வ ஸாரம் முதலிய க்ரந்தங்களின் திருநாமங்களிலும் அர்த்தவிசாரப்ரஸக்தி யில்லை. திவ்யப்ரபந்தத்தை ப்ரபந்தமென்று ஸாமாந்யமாகச் சொல்லு வதும்; அந்த திவ்யப்ரபந்தங்களின் அர்த்தவிசாரலேசமுமற்ற சுவடிக்கு ப்ரபந்தஸாரமென்று பெயரிடுவதும் தேசிகக்ருத்யமாக இருக்கத்தகுதியே யில்லையென்பதைத் தெரிவித்தாலும் தெளியமாட்டாதவர்கள்*ந நிரஸ் நீயாः; அபி து சோசநீயாः.

**—"வேதாந்தகுரு மொழிந்த ப்ரபந்தஸார"த்தின் பொல்லாங்கு.—**

38. முடிவுபாட்டில் "வேதாந்தகுரு மொழிந்த ப்ரபந்தசாரம்" என்றுள்ளது. எந்த பதிப்பும் இப்படியேதான். உயிரெழுத்தையோ உயிர் மெய்யெழுத்தையோ முதலாகக்கொண்ட சொல்வடிவம் செய்யுட்களில் பிரயோகிக்கப்படுமேயல்லது வெறும் மெய்யெழுத்தை முதலிற்கொண்ட சொல்வடிவம் பிரயோகிக்கப்படுவதை இங்குத்தான் கண்டோம். "இணைந் தியல்காலை யரலக்கிகரமும்" என்ற நன்னூற் சூத்திரப்படி (பிரபந்த) என்றாக்கிச் சொல்லியிருக்கலாம். அங்ஙனே சொல்லுமிடத்து அது மூவசைச் சீராய்விடுமென்றும், அதில் க்ரமபங்கமாமென்றும், ஓசையும்

சிதையுமென்றும் இவர்களே தெரிந்துகொண்டு ஒருவர்கூட அங்ஙனே பதிப்பிக்கவில்லை. இப்பிரபந்தத்திற்கு ப்ராஹ்மாண்டமாகத் தோன்றியுள்ள இரண்டு தனியன்களிலும் ப்ரபந்தசாரந்தான், ஒன்றிலும் பிரபந்தசாரம் கிடையாது. குடப்பாம்பில் கையிட்டுரைப்போம்—அந்தத் தனியன்களை யியற்றியவர் எவரோ அவரே ப்ரபந்தஸார கர்த்தாவென்று.

## மிகமிக முக்கியமானவொரு அஸங்கத ப்ரதர்சநம்

39. பிரபந்தசாரத்தில் 'வையகமெண்* என்கிற பதினேழாம் பாட்டு மிகவும் பிற்பட்டது. நூல்செய்து முடித்தபிறகு வேறொருவரால் செய்து நுழைக்கப்பட்டதென்கை. இதற்கு மறுக்கொணாத சான்று கேண்மின். இப்பாட்டில் ஆழ்வார்கள் பன்னிருவரையும் பேசிமுடித்தபின் "எதிராசர் தம்மோடு ஆறிருவர் ஓரொருவர் அவர் தாம் செய்த" என்றுள்ளது. இதனால் இராமாநுசநூற்றந்தாதியை இராமானுசர்தாமே செய்தருளியதாகக் கூறப்பட்டுள்ளது. இதற்கு இப்படி பொருளல்லவென்றும் 'இராமாநுசர் செய்வித்த' என்று பொருள் கொள்ளலாமென்றும், மற்றொருபடியாகவுங் கொள்ளலாமென்றும் நவீனவுரைகாரர்கள் சிரமப்படுகிறார்கள். அது………… 'வ்ருதா ச்ரம:' அத்தனை. 'இராமாநுசர் இயற்றினபடியாலே இராமாநுசநூற்றந்தாதியெனப் பெயர் வந்தது' என்று மருண்டவொருவர் செய்த செய்யுளிது. அன்றியும், இதில் ஓரொருவர் என்கிற பிரயோகம் மிகத்தவறு. 'யாரேனுமொருவர்' என்பது இதன் பொருளேயல்லது 'ஒருவர்' என்பது பொருளல்ல. வடமொழியில் 'யோபிகோபிவா' என்பதனோடொக்குமிது. இவற்றாலும் இது தேசிகக்ருதியன்றென்பது நிலைநாட்டப்பட்டதாம்.

## —நூல்களின் கர்த்தாக்கள் பெயர் மாறுவதற்கு இரண்டு ஹேது.—

40. உலகில் சில நூல்களுக்குக் கர்த்தாக்களின் பெயர் மாறாடிப் போவது இரண்டு காரணங்களினாலாகும். அவ்விரண்டு வகைகளையும் நிரூபிக்கிறோம். (1) நாமஸாஜாத்யத்தைக்கொண்டு ப்ரமத்தினால், ஒருவர் செய்த நூலை மற்றொருவர் செய்ததாகக்கொண்டு [ப்ரமத்தினால்] அப்படியே ப்ரசாரம் செய்துபோருவது ஒன்று. (2) ஒருவர் இயற்றாத நூலை அவர் இயற்றியதாக ஏதோ காரணார்த்தமாகக் கல்பனைசெய்து பரவவிடுதல். இவ்விரண்டுக்கும் அடைவே லக்ஷ்யங்களையும் சிறிது காட்டுகிறோம்.

41. யமகரத்நாகரமென்கிற வொருக்ரந்தம் பதினாறு ஆச்வாஸங்களோடுகூடிய மிகப்பெரிய க்ரந்தம் கூரத்தாழ்வானருளிச் செய்ததாக விச்வாவஸு வருஷத்தில் [அதாவது 55 வருடங்களுக்கு முன்பு] அச்சிடப்பட்டுவெளிவந்துளது. இதற்கு வியாக்கியானமும் கூரத்தாழ்வானே செய்ததாக கூடவே அச்சிடப்பட்டிருக்கின்றது. ஆழ்வான் தனியன், ஆழ்வான் வைபவம் எல்லாம் உடன் சேர்க்கப்பட்டுள்ளது. "ஸ்ரீவத்ஸாங்க,

பராசராந்யாஜ்வ:" என்றிருப்பதைக்கண்டு மஹான்களும் இங்ஙனே மருண்டுவிட்டார்கள். அதில் (பக்கம் 88ல்)

"यत्पुनर्भाष्यकारैः—दहराकाशशब्देन परंब्रह्मोच्यते, *तस्मिन् यदन्तरिति अपहतपाप्मत्वादयः अष्टौ गुणा उपास्यत्वेनोच्यन्ते इत्युक्तम्. तत् शारीरेऽस्माभि र्निराकृतम्. स्वपक्षश्च तत्र युक्तिभिस्स्थापितः; उभयं तत्रैवावगन्तव्यम्"

என்றிருப்பதைக்கண்டு வைத்துங்கூட மருண்டார்கள் மஹான்கள். இது மட்டுமல்லாமல் மற்றும்பல ஹேதுக்களையும் காட்டி நாம் இதனைப்பண்டே மறுத்து வெளியிட்டிருக்கிறோம். கீதார்த்தஸங்க்ரஹ தீபிகா என்கிற க்ரந்தம் மணவாளமாமுனிகளருளிச் செய்ததாக 1906ல் வெளியிட்டிருப்பது முதலான மற்றும் பலவிஷயங்கள் இந்தத்துறையிலே சேரும்.

42. திருவெவ்வுளூரெம்பெருமானுக்கு தேசிக ஸ்துதியில்லையே யென்று குறைபட்ட சிலர் கிங்க்ருஹேசஸ்துதி யென்று ஒன்று கல்பித்து தேசிகக்ருதியாக வெளியிட்டிருக்கிறார்கள். ஹரிதிநதிலகமென்று ஒன்று. இங்ஙனே பல காட்டலாகும். ஆசார்ய கோஷ்டியில் சேராதவொருவர் செய்த ஸ்ரீஸூக்தபாஷ்யத்தை நஞ்சீயருடைய க்ருதியாக ஏறிட்டு வெளியிட்டிருப்பது. இத்தகைய ப்ரமவிப்ரலம்பங்களை நாம் ஏற்கெனவே சில நூல்களில் விரிவாக நிரூபித்தது உலகமேற்க நிற்கின்றது. பிரபந்த சாரத்தின் பரிசுமித்தகைத்தே.

## —ப்ரபந்தஸார ஸஹோதரவர்க்க நிரூபணம்.—

43. எதற்காக இது இயற்றப்பட்டது? எப்போது இயற்றப்பட்டது? இதற்கு ஸஹோதரங்களான க்ருதிகள் எவையெவை? இத்யாதிகளான சில மருமங்களை விரிவுக்கஞ்சாமல் பிறகு பன்னியுரைப்போம்; இப்போது சுருக்கமாகவும் ஸாரமாகவும் தெரிவிக்கிறோம். உலகில் ஸஹோதரர்களென்னப்படுமவர்கள் ஜனிப்பது வெவ்வேறு வருஷங்களிலும் வெவ்வேறு மாதங்களிலும் வெவ்வேறு நக்ஷத்ர திதி வார லக்னங்களிலுமாகும். இந்த ப்ரபந்த ஸாரத்திற்கு ஸஹோதரங்களென்னப் பிறந்தவைகளுக்கு வர்ஷ பேதமோ மாஸ பேதமோ பக்ஷ பேதமோ கிடையாது, திதி வார நக்ஷத்ர லக்நபேதங்களிருக்கலாம்த்தனை. ராமாநுஜ தயா பாத்ரம், நமோராமாநுஜார்யாய, வாழிகள், பிள்ளை யந்தாதி, ப்ரபந்தஸாரம், ப்ரபந்தாநுஸந்தான தீபிகை, வடகலை குருபரம்பராப்ரபாவம் என்னுமிவையேழும் ஒரு பிதாவினிடத்தே ஒரு ஸமயவிசேஷத்திலேயே ஜனித்தவை என்பது ஒருவராலும் ஒருநாளும் மறக்கற்பாலதன்று.

## —ப்ராஸங்கிகமாகக் கம்பராமாயணம் காட்டுதல்—

44. சக்ரவர்த்தி திருமகன் விபீஷணாழ்வானோடு கூடிய போது "குகனொடுமைவரானோம்....நின்னொடு மெழுவரானோம்" என்கிற செய்யுளி

ஞல் தசரதாத்மஜர்கள் எழுவராகக் கூறினதாய்க் கம்பர் தெரிவித்துள்ளார். தசரத சக்ரவர்த்திக்கு ஏககாலத்தில் திருக்குமாரர்கள் நால்வர் திருவவதரித்தும் த்ருப்தி பிறவாமல் இன்னமும் சில குமாரர்கள் வேணுமென்று அபேக்ஷையுண்டாக, அதைப் பூர்த்தி செய்வதற்காகவே பெருமாள் காட்டுக்குப் புறப்பட்டாராம். வனப்ரயாண ப்ராரம்பத்தில் குஹப் பெருமாளை ஒரு ஸஹோதரராகப் பெற்றாராம். இடையில் ஸுக்ரீவ மஹாராஜரையும், முடிவில் விபீஷணாழ்வானையும் ஸஹோதரராகப் பெற்றாராம்; ஆகவே தாங்கள் ஏழு ஸஹோதரர்களாகிவிட்டதாகப் பெருமாள் கூறினராம். அந்தச் செய்யுள் வருமாறு :—

" குகனொடுமைவரானேம் முன்புபின் குன்று சூழ்வான்
மகனொடு மறுவரானேம் எம்முழை யன்பின்வந்த
அகனமர் காதலைய ! நின்னொடு மெழுவரானேம்
புகலருங் கானந்தந்து புதல்வராற் பொலிந்தானுந்தை "

என்பதாம். அந்த ஏழு ஸஹோதரர்களும் லோகாபிநந்தநீயர்களாய் லோகக்ஷேமார்த்தமாக விளங்கினர். இந்த ஏழு ஸஹோதர வாங்மயங்களோவென்னில் ; லோகக்ஷோபார்த்தமாகவே தோன்றின.

## —இவ்வாராய்ச்சியின் அடியுணர்த்துதல்.—

45. இந்த ஏழுவாங்மயங்களும் நமக்கு இளமை தொடங்கியே காதில் விழுந்து கொண்டு பரிசிதங்களாய் விட்டபடியால் 'நம்முடைய ஸம்பிரதாயத்திலிருப்பது போலவே இதரர்களுடைய ஸம்பிரதாயத்திலும் இருக்கின்றன' என்றே ஸஹஜமாக நினைத்துவிட நேர்ந்தது. ஆராய்ச்சி செய்ய ப்ரமேயம் எப்போது ஏற்பட்டதெனில்: ஒரு வருஷத்தில் ராமாநுஜதயா பாத்ரத் தனியனுக்கு 600 வருஷ பூர்த்தி மஹோத்ஸவம் நடத்துவதாக விளம்பரங்கள் வெளிவந்தன. இந்தத் தனியனிற் காட்டிலும் மிகச் சிறந்ததாய் சிஷ்ட வரிஷ்ட பரிக்ருஹீதமாய் எங்கும் எவ்விதமான பங்கத்தையுமடையாததுமான ஸ்ரீமாங்வேங்கடநாதார்ய தனியனுக்கு ஒரு உத்ஸவமும் செய்ய நினையாமல் இதற்குச் செய்ய ப்ரபல கோலாஹலங்கள் பண்ணுவது எதற்காகவென்று ஆராயத் தோன்றிற்று. அப்போது ராமாநுஜதயா பாத்ரத்தனியனுக்கு ஜாதகமாக ஒரு பெரிய ச்லோகம் நவீனர்களால் வெளியிடப்பட்டது கிடைத்தது. அதில் சப்ததோஷங்கள் ஒரு புறமிருக்க, இத்தனியன் பிறந்த வருஷ மாஸ நக்ஷத்ர திதி வார லக்ன ஹோரைகள் ஒன்றுவிடாமல் பொறித்திருந்ததுகண்டு, உலகில் ஆசார்யர்களுக்கெல்லாம் தோன்றியுள்ள தனியன்களுள் ஒன்றுக்குக்கூட இன்னது காலமென்று தெரிந்துகொள்ள வழியில்லாமலிருக்க, ஸ்ரீமாங் வேங்கட தனியனுக்கும் அப்படியேயாயிருக்க, இதற்குமட்டும் இந்த தடபுடல் ச்லோகாவதரணம் எதற்காகவென்று விசேஷித்து ஆராயத் தோன்றிற்று. ஆராய்ந்ததில் வெளிவந்த நூற்றுக்கணக்கான விஷயங்கள் பலகால் வெளியிடப்பட்டிருக்

கின்றன. இந்நூலிலும் மூன்றாவது பரிச்சேதத்தில் ஸாரமாக வெளிவரும். அதுபோலவே ப்ரபந்த ஸாரோத்ஸவமென்று நவீந கோலாஹலம் கண்டபோது தான் இதைப்பற்றியும் ஆராய்ச்சி செய்ய அவசியமாயிற்று. ஸ்ரீபாஷ்ய சததூஷண்யாதிகள் இருக்குமிட மின்னதென்று தெரியாமலிருக்க இதற்கென்ன வந்ததோ. 1957-ல் செய்த ஆராய்ச்சிகள் இப்போது ஸம்க்ஷேபமாக வெளியிடப்பட்டன. அவசியமானபோது விஸ்தாரமாகும். .... .... .... .... .... *

**ப்ரபந்தஸார தத்வஸாரத்தின் முதல்பரிச்சேதம் முற்றிற்று.**

---

# இரண்டாம் பரிச்சேதம்.

46. ப்ரபந்த ஸாரத்திலிருந்து விரிவாக எடுத்துக்காட்டப்பட்ட விஷயங்கள் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளுக்கு நேர்விருத்தங்களென்பதை விவரித்தோம் தச்சேஷபூதமாக, தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை ரேகாமாத்ரமும் அதிவர்த்தியாமல் ஸாகல்யேந அநுவர்த்தித்தே பேசுமவர் என்பதை இனி விவரிக்கிறோம். கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை, ஸ்தோத்ர பாஷ்யம், த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி, தத்ஸாரம், ஸச்சரித்ர ரக்ஷை என்னுமிந்த க்ரந்த ரத்நங்களிலிருந்து இதை மூதலிக்கிறோம்.

**—தாத்பர்ய சந்த்ரிகையில் பெரியவாச்சான்பிள்ளைஸூக்தியநுஸரணம்.—**

47. கீதை நான்காமத்யாயத்தில் பதினோராம் ச்லோகம்—* யே யதா மாம் ப்ரபத்யந்தே.......இத்யாதி. * இங்கு தாத்பர்ய சந்திரிகையில்

"अत्र कृष्णावतारवृत्तान्तेन सह अर्चावतारवृत्तान्तोऽपि संगृहीतः"

என்று தேசிகனலருளிச் செய்யப்பட்டுள்ளது. இந்த கீதா ச்லோகத்தை அர்ச்சாவதாரத்திற்கும் ஸங்க்ராஹகமாக ஆளவந்தாரோ பகவத்பாஷ்யகாரரோ யாரும் பணித்ததில்லை. நம்பிள்ளையுபந்யாஸத்தில் மட்டுமே அவதரித்த அர்த்தமிது. திருவாய்மொழியில் (8—1—4.) * உமருகந்துகந்த வுருவம் நின்னுருவமாகி * என்ற பாட்டின் இருபத்துநாலாயிரப்படியில் கண்டோமிதை. அடுத்தபடியாக தாத்பர்ய சந்த்ரிகையில்தான்கண்டோம்.

**—தாத்பர்ய சந்த்ரிகையிலிருந்தே மற்றுமொன்று காட்டுதல்.—**

48. ஏழாவது அத்யாயத்தில் (17) * அஹம் ஸச மம ப்ரிய: * என்றவிடத்தில் தாத்பர்ய சந்த்ரிகை முடிவில்—

"स च मम प्रिय इत्यत्र निरतिशयप्रीतिं कुर्वतोऽपि महोदारस्येश्वरस्यापितत्प्रीत्युपाधिकप्रीतिकरणात् अतृप्तिस्सूचितेति केचिदाचार्याः"

என்று ஸாதித்திருக்கிறார் தேசிகன். இங்கு ஒரு இன்சுவைப் பொருளைக்

காட்டிச் சில ஆசாரியர்களருளிச் செய்ததாக முடித்திருக்கிறார். அந்த ஆசாரியரை இன்னாரென்று அறிவீர்களோ? * ராஜ்யம் வா த்ரிஷு லோகேஷு ஸீதா வா ஜநகாத்மஜா, த்ரைலோக்ய ராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத் கலாம் * என்கிற ச்லோகத்தை நிதியாகக்கொண்டு *துல்யசீல வயோவ்ருத்தாம் துல்யாபிஜந லக்ஷணம், ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்ச இயமஸிதேக்ஷணா * என்ற ச்லோகத்தில் சகாரத்திற்கு அர்த்தமருளிச்செய்த பேராசிரியரே யென்றுணர்மின்.

**—ஸ்தோத்ரபாஷ்யத்திலிருந்து பல காட்டுதல்.—**

49. ஸ்தோத்ரபாஷ்யத்தை யெடுத்துக்கொள்வோம். ஒவ்வொரு ச்லோகத்தின் பாஷ்யத்தையும் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தை உடன் கொண்டு ஸேவித்தால், அவருடைய வியாக்கியான ஸரணியை தேசிகன் எவ்வளவு தழுவியிருக்கிறார் என்பது அநாயாஸமாக விளங்கும். * நமோசிந்த்யாத்புத* என்கிற முதல் ச்லோகத்திலிருந்தே பார்க்கலாம். பெரியவாச்சான்பிள்ளை உதாஹரித்தருளுகிற ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களை நூற்றுக்கு எண்பது பங்கு விடுவதில்லை தேசிகன். இது அநுமாநமன்று, உத்ப்ரேக்ஷையன்று, உல்லேகமன்று. இரண்டு ஸ்ரீகோசங்களும் ஸுலபமேயிறே. துர்லபமன்றே. எடுத்துப் பரீக்ஷிக்கலாமே. ப்ரமாணங்களைக் கொள்வது மாத்திரமேயன்று. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்காணும் இன்சுவைமிக்க பொருள்களை அப்படியே தழுவிக்கொள்வதையும் காணலாம். இதற்கு நூறிடங்கள் எடுத்துக் காட்டலாம்; ஆயினும் இங்குச் சிலவிடங்களே காட்டப்படுகின்றன.

**—ஜ்ஞாநவைராக்ய ராசயே என்றவிடம்.—**

50. முதல் ச்லோகத்தில் *ஜ்ஞாநவைராக்யராசயே* என்ற விடத்தில் வாரிராசி:, ஜலராசி: இத்யாதி ஸ்தலங்களிற்போல் ஜ்ஞாநவைராக்யங்களுக்கு ராசியாயிருப்பவர் என்கிறபொருளே எல்லார்க்கும் தோன்றக் கூடியது. இது ஸங்கதமான பொருளேயன்றி அஸங்கதமான பொருளன்று. இவ்வகைப்பொருளை முந்துறப் பணித்தார்தேசிகன்: இங்கே பெரியவாச்சான்பிள்ளை பஹுவ்ரீஹியை விவக்ஷித்து, ராசி யென்பதற்கு ஸமூஹப்பொருளைக் கொண்டு ஜ்ஞான ஸமூஹங்களையும் வைராக்ய ஸமூஹங்களையு முடையவர் என்றுரைத்து, ஜ்ஞாநமும் வைராக்யமும் ஒன்றாயிருக்க ராசியென்னலாமோவென்று சங்கித்துக் கொண்டு 'பகவத் ஸ்வரூபாதிகள் ஜ்ஞான விஷயங்களாகையாலே பல; த்யாஜ்ய விஷயங்களும் பலவாகையாலே வைராக்யங்களும் பலவென்று சொல்லலாம்' என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகன் பாஷ்யத்தில் இதை அப்படியே மொழிபெயர்த்திருக்கிறார்; * " अचिन्त्यत्वादिविशिष्टौ ज्ञानवैराग्यराशी यस्येति बहुव्रीहिर्वा; तदा तु ज्ञानवैराग्ययोः प्रत्येकं विषयानन्त्येन भेदमनुसन्धाय राशित्व क्लृप्तिः " * என்பது தேசிக ஸூக்தி.

51. மேலே * அகாதபகவத் பக்திஸிந்தவே * என்றவிடத்திலும் பக்திக்குக் கடலாயிருப்பவர் என்று பொருள் கொள்ளாமல், *காதல் கடல் புரைய விளைவித்த * காதல் கடலின் மிகப் பெரிதால்*இத்யாதி திவ்ய ஸூக்திகளுக்குச் சேர பக்தியைக் கடலாக ரூபித்து அகாதமான பகவத் பக்திஸிந்துவையுடையவர் என்று உரைத்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகன் அதையும் தழுவி "பக்திம் வா ஸிந்துத்வேந ரூபயித்வா பஹுவ்ரீஹி:" என்று பணித்தார்.

52. * ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே * என்றவிடத்தில் லோகே என்பதற்கு (ஸம்ஸாரி ஜநே) என்று முதலில் ஸாமான்யமாகப் பொருள் பணித்த தேசிகன் (லோகே—சாஸ்திரத்தில்) என்றுள்ள பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை ஸேவித்து * "लोक्यते अनेनेति लोकः-प्रमाणम् ..." இத்யாதியை யருளிச் செய்தார்.

53. * வசீ வதாந்யோ குணவாந் * என்ற ச்லோகத்தில் அநுபவிக்கப்பட்ட பன்னிரண்டு திருக்குணங்களையும் விவரித்தருளாநின்ற தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தையே ப்ராயேண மொழிபெயர்த்திருக்கின்றார். இப்படி அதுவிதுவுதுவென்று எடுத்துக்காட்டவேண்டுமோ? ச்லோகந்தோறும் நியதமாகவே காணலாம். சிறிது மேலே போவோம் :

54. * அசிந்த்யதிவ்யாத்புதேத்யாதி (47) ச்லோகத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை இட்டருளின அவதாரிகையையே சிறிது பெருக்கி மொழி பெயர்த்திருக்கிறார் தேசிகன். பக்தஜநைக ஜீவிதம் என்பதற்கு பக்த ஜநங்களுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்குமவன் என்றும், பக்த ஜநங்களையே தனக்கு தாரகமாகவுடையவன் என்றும் இரண்டு விதமாகப் பொருள் பணித்தார் பெரியவாச்சான்பிள்ளை ; தேசிகனும் அப்படியே பாஷ்யமிட்டருளினர். இதற்கு அடுத்தது ஸமர்த்தம் என்பது. இதற்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை யநுஸரித்தே பாஷ்ய முள்ளது. எங்ஙனேயென்னில் ; (இது மிகப்பெரிய விஷயம்.)

55. எம்பெருமானுக்கு ஸமர்த்தம் என்றல்லவோ விசேஷண முள்ளது. க்ஷுத்ரர்களான நாமெல்லாருங்கூட கதாசித் ஸமர்த்தர்களென்று கொண்டாடப்படுகிறோம். எம்பெருமானை ஸமர்த்தனென்றால் அவனுடைய ஸாமர்த்தியம் ஸாமாந்யமாயிருக்க முடியாதே ; இங்கு எவ்விதமான விசேஷத்தைக் காட்டலாமென்று விமர்சித்த பெரியவாச்சான் பிள்ளை ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை உள்ளபடி யுணர்ந்து தமது வியாக்கியானத்தில்—"[ஸமர்த்தம்] அளவுடையரான நித்யஸூரிகள் அனுபவிக்கும் தன்னை நித்ய ஸம்ஸாரிகள் அநுபவிக்குமிடத்தில் * ஆற்றநல்ல வகை காட்டுமம்மானை * என்கிறபடியே ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்த்யத்தை யுடைய உன்னை" என்றருளிச் செய்தார். உண்மையில் எம்பெருமானுக்கு இதுதான் அற்புதமான ஸாமர்த்தியம். இப்பங்க்திகளை ஸேவித்த தேசிகன் இவ்வர்த்தத்தை மிகவும் ரஸித்து இதை அப்படியே மொழிபெயர்த்தவர் போல * "आश्रितानां सात्म्यभोगप्रदाने" * என்று அருளிச் செய்தார்;

(**ஸாத்ம்ய**) என்கிற ஸம்ஸ்கிருதபதம் சிறிது அபூர்வமானது. சரக ஸுச்ருதாதிகளிலே கையாண்டது. நம் ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களில்தான் இந்த பதம் விசேஷமாகக் காணப்படும். திருவாய்மொழியில் (1—9.) *இவையுமவையுமுவையும்*என்கிற பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாக (ஆறாயிரப் படியிலன்றிக்கே) பெரியவாச்சான் பிள்ளை அவதாரிகையிட்டருளினர். அதை யநுஸரித்து தேசிகன் த்ரமிடோப நிஷத்தாத்பர்ய ரத்நாவலியில் “ **विभुमनुबुभुजे सात्म्यभोगप्रदानात्** ” * என்றருளிச் செய்தார். அந்த ப்ரயோகத்தையே இங்கும் செய்தருளியுள்ளார்.

### —ஸச்சரித்ர ரக்ஷையிலிருந்து—

56. ஸச்சரித்ர ரக்ஷையில் ஊர்த்வபுண்ட்ர விசாரபரமான இரண்டாமதிகாரத்தில்:—* “ **ननु समस्तभागवतसार्थसंगृहीतबकुलधरमहर्षिदृष्टे द्रमिड निगमे कथम्......** ” * என்று தொடங்கி, * கரியமேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும். பெரிய கோலத் தடங்கண்ணன் * (4-5-6) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தைப்பற்றி அர்த்தவிசாரம் செய்யப்புகுந்து * “ **चक्षुषि च तद्धारणं तत्र विहितमिति अञ्जनपरत्वमाहुराचार्याः** ” * என்று எழுதியுள்ளார் தேசிகன். இங்கு **ஆசார்யா:** என்கிற சொல்லால் பெரியவாச்சான் பிள்ளையையே விவக்ஷிக்கிறாரென்பது அசைக்கமுடியாதது. ஏன்? மேலே குறித்த பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆறாயிரப்படி வியாக்கியானம்:— “நீலமேக நிப திவ்யரூபோசித திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய், அதிவிசாலமாயதிரமணீயமாயிருப்பதொரு தாமரைத் தடாகம்போலேயிருந்த திருக்கண்களையுடையனாய்” என்பது. இதனால், **வெளிய நீறு** என்பதற்கு திவ்யாங்கராகமென்னும் பொருள் கொள்ளப்பட்டதென்பதும்; ‘கரியமேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்’ என்கிற முதலடியானது எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டதென்பதும் நன்கு விளங்கிற்று. பெரியவாச்சான் பிள்ளையினுடைய வியாக்கியானத்தில் அருளிச்செய்திருக்கும் விதமானது பிள்ளானருளிச்செய்த விதத்திற் காட்டில் மிக வேறுபட்டது. ‘வெளிய நீறு’ என்பதற்கு அஞ்ஜந சூர்ணமென்று பொருள் கொள்ளப்பட்டது. “கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்’ என்கிற முதலடி எம்பெருமானுக்கு விசேணமாகக் கொள்ளப்படாமல் ‘பெரியகோலத் தடங்கண்ணன்’ என்றதன் ஏகதேசமான திருக் கண்களுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டது. ‘திருக் கண்களின் கரிய விழியினுடைய கறுத்த நிறத்தின்மேலே அஞ்ஜநசூர்ணத்தையிடப்பெற்ற திருக்கண்களையுடையவன்’ என்னும் தாத்பரியம் பெரியவாச்சான் பிள்ளை முதலானோருடைய வியாக்கியானங்களில் மாத்திரம் காண்கிறது. பிள்ளானுடைய வியாக்கியானம் இதனில் மிக வேறுபட்டதென்பது புநருக்தம். ‘ **चक्षुषि च तद्धारणं तत्र विहितमिति अञ्जनपरत्वमाहुरा-**

சார்ய: "* என்றெழுதிய தேசிகன் நம்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளைகளையே ஆசார்யராகச் சுட்டினரென்பது நிஸ்ஸந்தேஹவிபர்யயம்; பிள்ளானுடைய வியாக்கியானத்தில் நீறு என்பதற்கு அஞ்ஜநபரத்வமும் கூறப்படவில்லை. சக்ஷுஷி தாரணமும் காட்டப்படவில்லையன்றோ. ஆறாயிரப்படியில் "திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய்" என்கிற பங்க்தி ஸுஸ்பஷ்டமாயிருக்கையாலே நீறு என்பதற்கு அங்கராகப் பொருளும் அந்த அங்கராகத்தினால் திருமேனி அநுலிப்தமாயிருக்கிறதென்பதுமே பிள்ளானுடைய திருவுள்ளமாகத் தேறுகிறது.

### — நம்பிள்ளை சிஷ்யர்களையே தேசிகன் ஆசார்யராகக் கொண்டவரென்பதன் நிகமனம் —

57. ஆக, ஸச்சரித்ர ரக்ஷையில் ஆசார்யா ஆஹு: என்று எடுத்துக் காட்டியிருக்கும் விஷயம் பிள்ளானுடைய படியில் கிடையாதென்றும் நம்பிள்ளை பரம்பரையினருடைய வியாக்கியானங்களிலேயே உள்ளதென்றும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறுகின்றது. (கேசித் ஆஹு:) என்னாமல் ஆசார்யா ஆஹு: என்று எழுதியிருக்கையாலே நம்பிள்ளை பரம்பரையில் வந்த மஹான்களையே தமக்கு ஆசார்யராகக்கொண்டு உஜ்ஜீவித்தவர் தேசிகன் என்கிற பரமார்த்தம் நிஷ்கல்மஷமாகத் தேறுகின்றது. கீழே நாம் தாத்பர்ய சந்த்ரிகையிலிருந்து எடுத்துக்காட்டிய பகுதியிலும் ஆசார்யா: என்று ஸாதித்திருப்பதையும் கூட்டிக்கொண்டு தெளிக.

## — த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலிருந்து பலபல காட்டுகிறோம் —

### — தேசிகனுக்கு பகவத்விஷய காலக்ஷேபக்ரந்த மின்னதென்பது —

58. தேசிகன் உபய வேதாந்தத்தையும் குருமுகமாக அதிகரித்தவர் என்பது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானமும் அவதரியாதிருந்தகாலத்தில் பூர்வாசார்யர்கள் மூலத்தை வைத்துக்கொண்டே ஸ்வஸ்வாசார்யர்களிடத்தில் அர்த்த ச்ரவணம் பண்ணிவந்தார்கள். பிள்ளானுடைய ஆறாயிரப்படி அவதரித்த பின்பு அக்காலத்திலுள்ளவர்கள் அதைக்கொண்டே காலக்ஷேபம் செய்துவந்தார்கள். நஞ்சீயருடைய ஒன்பதினாயிரப்படிக்குப் பிறகு பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படி மிக விரிவாகவும் ரஸபரிபுஷ்டமாகவும் அவதரித்தபடியினாலே அக்காலத்திருந்தவர்கள் யாவர்க்கும் அந்த இருபத்துநாலாயிரப்படிகொண்டேகாலக்ஷேபமாயிற்று.

### — தேசிகனுக்கு ஈடு முப்பத்தாறாயிரப்படி கிடைக்காமை —

59. அப்போது ஈடுமுப்பத்தாறாயிரப்படி அவதரித்திருந்தும் அது அக்காலத்தில் பிரசாரமடையாமல் பிறகு பிரசாரமடைந்தபடி

யினல் அந்த மத்யகாலத்தில் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே தேசிகன் முதலானர்க்குக் காலக்ஷேப க்ரந்தமாக விளங்கிற்று—என்னு மிது அளவுகடந்த ஸாக்ஷியங்களால் அவிசால்யமாகக் காட்டி நிரூபிக் கப்பட்டிருக்கிறது. இந்த நிரூபணங்கள் ஸாமாந்யப்ரஜ்ஞர்களின் புத் திக்கு அடியோடு எட்டமாட்டாதவை. விசேஷஜ்ஞர்கள் கவனிப்பது.

## — தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளையே தஞ்சமாகக் கொண்ட விடங்கள் —

60. திருவாய்மொழியில் (1-8.) ஓடும் புள்ளேறி. (1-10) பொருமா நீள் படை. (2-8) அணைவதரவணைமேல்...இவை முதலான தசகங்களுக்கு ஆறாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம்; பெரியவாச்சான் பிள்ளை யிருபத்துநாலாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம்; இதை ஒவ்வொருவரும் அநாயாஸமாக அறியலாம். தேசிகன் இருபத்து நாலாயிரப்படியையே அடியொற்றி த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நா வலியையும் த்ரமிடோபநிஷத் ஸாரத்தையும் ஸாதித்திருக்கிறார். இது அபலபிக்க முடியாமலிருக்கின்றது. தாத்பர்யரத்நாவலியில் திருவாய் மொழியின் ஒவ்வொரு பாசுரத்தை நோக்கி ஒவ்வொரு பதமன்றே அருளிச் செய்யப்படுகிறது. அப்படிப்பட்ட பதமும் பெரும்பாலும் இருபத்து நாலாயிரப்படியிலுள்ள பதமாகவுள்ளதென்று இதுவும் நுட்பமாகக் காட்டப்பட்டிருக்கிறது. மற்றொரு மிகச் சிறந்த் விஷயமும் கேண்மின்.

## — தாளதாமரையில் காட்டும் விசேஷம் மிக முக்கியமானது —

61. பத்தாம்பத்தில் முதல் திருவாய் மொழி * தாளதாமரை யென்பது. இதில் திருமோகூரெம்பெருமானுடைய அநுபவம் நிகழ் கின்றது. இத்திருவாய்மொழிக்கு அவதாரிகை யிட்டருளின திருக்குரு கைப் பிரான் பிள்ளான் ஆறாயிரப்படியில்—“திருக்கண்ணபுரத்தி லெம் பெருமானை யனுபவித்து இப்போது திருமோகூரிலெம்பெருமானை யநு பவிக்கிறார்” என்று இவ்வளவேயருளிச் செய்தார். மேற் பாசுரங்களி லும் ஸாதாரணமாகப் பாசுரப்பொருளே பணித்துள்ளார். மற்ற ஆசார் யர்களெல்லாரும் இங்கு ஒரு விசேஷ மருளிச்செய்கிறார்கள்; அதாவது, ஆழ்வார் கீழ் * மாலைநண்ணித் திருவாய்மொழியில் * சரணமாகுமென் கிற பாசுரத்தில் தம்முடைய பரமபதயாத்திரையை நிச்சயித்து அர்ச்சி ராதி மார்க்க கதியை யறுதியிட்டு அந்த கதிக்குத் திருமோகூர்க் காள மேகப் பெருமாளை **வழித்துணையாகப்** பற்றுகிறார் இத்திருவாய் மொழி யில்—என்பதே. மணவாள மாமுனிகள் நூற்றந்தாதியில் * தாளடைந் தோர் தங்கட்குத் **தானேவழித்துணையாம்**, காளமேகத்தைக் கதியாக்கி * என்றருளிச் செய்தார். ஆசார்ய ஹ்ருதயத்தில் “மார்க்கபந்து சைத் யம் மோஹனத்தே மடுவிடும்” என்று பணிக்கப்பட்டது. பெரியவாச் சான்பிள்ளை யிருபத்துநாலாயிரப்படி முதலானவற்றிலும் ‘காளமேகப் பெருமாளை வழித்துணையாகப் பற்றுகிறார்’ என்றுள்ளது. இவ்வித

மாக ப்ரமேயசிக்ஷை ஆறாயிரப்படியில் ஸூசனையாகக் கூட கிடையாதென்பது நிர்விவாதம். திருமோகூரப்பனை ஸ்தோத்ரம் பண்ணுகிறாரென்னுமித்தனையே ஆறாயிரப்படியிலுள்ளது. இனி, தேசிகனது த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் தத்ஸாரத்திலும் பார்க்கவேணும். ரத்நாவளியில் (104) * தைத்யாநாமித்யாதி ச்லோகத்தில் * "श्रान्तिहारित्व मुख्यैराकारैः सद्गतिस्याज्जलदतनुरुचिश्चेति तेनाभ्यधायि" *என்கிறார்; *ஸத்கதிஸ் ஸ்யாத் * என்பதற்கு வியாக்கியான மிட்டவர்கள் "காளமேகப் பெருமாளே வழித்துணை யென்று" என்றெழுதி வைத்தார்கள். த்ரமிடோபநிஷத்ஸாரத்திலும் இப்பதிகத்தில் தேறின குணமாக "ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ" என்றருளிச்செய்தார். *ஸத் கதிஸ் ஸ்யாத்* என்ற தாத்பர்ய ரத்நாவளிக்கு * ஸத்பதவ்யாம் ஸஹாயம் * என்றவிது ணக்விளக்காயிருக்கின்றது. ஆக்ரஹத்தைவிட்டு இதைநோக்கவேணும்.

## — தேசிகனுக்கு ஈடு கிடைத்திருந்தால் —

62. இப்படி இன்னும் பலவிடங்கள் உண்டு; தேசிகனுக்கு ஆறாயிரப்படியில் த்வேஷம் என்றோ வெறுப்பு என்றோ சொல்லுகிறோமல்லோம். அது மிகவும் சுருக்கமான வியாக்கியானமாயிருக்கிறபடியால் அதை ஒருகால் ஸேவித்து நிறுத்திப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அதற்கு நான்மடங்கு விரிவாகவும் ரஸகனமாகவும் இருக்கிற தென்கிற காரணத்தினால் தேசிகன் இதுதன்னையே நிதியாகக்கொண்டு இதையே தமக்குக் காலக்ஷேபக்ரமமாக ஆதரித்து வந்தாரென்பதே தத்துவம். அவர் ஈடுமுப்பத்தாறாயிரப்படியையும்ஸேவிக்க பாக்யம் பெற்றிருந்தால் 'தொல்லையின்பத்திறுதி கண்டேனே' என்று சொல்லி *மொய்ம்மாம் பூம்பொழிற் படியிலே மதுவனத்தில் வானர முதலிகள் பட்டபாடன்றோ பட்டிருப்பர்.

## — நவீனர்களின் அஸங்கதோக்தியொன்று —

63. உண்மை இங்ஙனேயிருக்க, "ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய வியாக்கியானங்களில் தேசிகன் தோஷங்களைக் கண்டு நிகம பரிமளமென்றொரு அழகான வியாக்கியானம் எழுபத்து நாலாயிரப்படியாகத் தாமியற்றி யருளினார்" என்று நிராலம்பமாக நவீநர்கள் எழுதுவது ப்ராமாணிக கோஷ்டிகளில் ஏற்கத் தக்கதன்று.

## — தேசிகனுக்கும் ப்ரகாலஸ்வாமிக்குமுள்ள நெடுவாசி —

64. திருவாய்மொழிக்குப் பதினெண்ணாயிரப்படி யுரையெழுதிய பெரிய ப்ரகாலஸ்வாமியென்பவர் "வ்யாக்யாநம் சடவைரிஸூரிவசஸாம் யத் தாக்ஷிணாத்யை: க்ருதம்" இத்யாதிச்லோக மொன்றைத் தொடக்கத்திலியற்றினார். இதன்பொருளென்னவென்றால்; தென்கலையாசாரியர்களினால் திருவாய்மொழிக்கு இடப்பட்ட வியாக்கியானமானது விருத்த

மான அர்த்தங்களைக் கொண்டிருந்தாலும் ரஸகனமாக இருப்பதனால் விருத்தார்த்தங்களை விட்டிட்டு இன்சுவைப் பொருள்களையெல்லாம் அப்படியே கொள்ளுகிறேனென்பதாம். இந்த ப்ரதிஜ்ஞையின்படியே தென்னாசார்ய வ்யாக்கியான ஸூக்திகளை [ஈடுமுதலானவற்றை] அப்படியப்படியே எடுத்தெழுதி வைத்து இடையிடையே அவ்வாசாரியர்களுக்கு தூஷணைகளையும் ஸம்பாவனையாக ஸமர்ப்பித்திருக்கிறார். தேசிகன் அவருடைய வகுப்பில் சேர்ந்தவரல்லர்; ஸங்கல்பஸூர்யோதயத்திலே "ப்ரதிதம் பாதகிவர்க்கம் க்ருதக்ந ஏகோஹி க்ருத்ஸ்நமதிசேதே" என்றருளிச் செய்தவராகையாலே க்ருதக்ந கோஷ்டியில் சேராமல் க்ருதஜ்ஞர்களில் தலைவராய், "முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னே போல் போற்றுவம்" என்று நன்னூலில் நவின்றபடியே பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்த அர்த்த விசேஷங்களை அவருடைய ஸூக்திகளோடுங் கூடவே கையாண்டு "ஆசார்யா:, ஆசார்யா:" என்று பஹுமாநம் தோற்ற எழுதியுமுள்ளார். இத்தகைய தேசிகன் அப்பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளுக்கு முரணாகவும், மற்றும்பல அஸந்தர்ப்பங்கள் மலிந்ததாகவும் பிரபந்தசாரமென்று ஒன்று எழுதி வைத்தாரென்று கூறுவது அஸத்யமென்பதோடு மஹாபசாரமுமாகும். இதிலுள்ள நிரூபணங்களைச் சிலர் மேலெழப் பார்த்து விட்டு "பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாயிருக்கிறதென்கிற காரணத்தினால் இவர் ப்ரபந்த ஸாரத்தைக் கல்பிதமென்கிறார்" என்று விப்ரலம்பமாகச் சொல்லப் புறப்படுவர்கள். இதுவன்று விஷயம். பல ஹேதுக்களில் இதுவுமொரு ஹேதுவென்று கொள்வது. ப்ரபந்தசாரம் உண்மையில் ஸர்வாத்மநா அஸங்கதார்த்த புஷ்கலம் என்பதே நம்முடைய நிரூபணஸர்வஸ்வம். .... .... .... ... *

**இரண்டாம் பரிச்சேதம் முற்றிற்று.**

---

# மூன்றுவது பரிச்சேதம்.

## — ஸப்தஸஹோதர தத்வ நிரூபணம் —

ப்ரபந்த ஸாரத்திற்கு ஸப்தஸஹோதரவாங்மயங்களுண்டென்று கீழே சொன்னோம். அந்த ஸஹோதரங்களின் தத்துவத்தை விளக்குகிறோமினி. ஸஹோதரேஷு தேஷு ஜ்யேஷ்டத்வம் ராமாநுஜதயாபாத்ரத் தனியனுக்கேயாதலால் அதன் ஜன்ம விருத்தாந்தம் தொடக்கமாக ஸகலமும் தெரிவிக்கலாகிறது. நாம் பலகால் தெரிவித்தவற்றின் ஸாரஸம்க்ஷேபமிது.

### — உண்மையைத் தெரிவித்துவைப்பது ஒருகால் பயன்படும் —

65. திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஆரம்பத்தனியனாக * ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தனியனே பகவந்நியமனத்தினால் ப்ராமாணிகமானது.

பிறகு 3-4 நூற்றாண்டுகள் கடந்தபின் விவாத நிமித்தம் மற்றைத் தனியனும் அதைச் சேர்ந்த வாழித்திருநாமங்களும் போட்டியாகப் பிறந்தவை. அச்சுக்கூடங்கள் ஏற்பட்ட பின்பு அவரவர்கள் யதேஷ்டமாக எழுதியச்சிடுமவற்றால் சில சரித்திரங்கள் தலைதடுமாறின நிலைமையில் வந்துவிட்டது. இப்படியே சில ஆண்டுகள் கழிந்துவிட்டால், பொய் மெய்யாகவும், மெய் பொய்யாகவும் ஆய்விடுகின்றது. பாமரஜனங்களின் ப்ரதிபத்தி எவ்வாறாக இருந்தாலும் விவேகிகளின் உள்ளம் என்ஞான்றும் உண்மையை உள்ளபடியே கடைப்பிடித்தேயிருக்கும். எத்தனை யுகமானாலும் உண்மையான செய்தி உலகில் ஒரு புறத்திலாவது உலாவியே நிற்கும். "இது அடியோடு பொருந்தாத விஷயம்" என்று விவேகிகள் உணர்ந்த பின்புங்கூட ஆக்ரஹத்தாலே பற்றினது விடாதொழிய ப்ராப்தமாகிறது. இந்த பிரபல ஆபத்தில் தப்பிப்பிழைப்பார் மிகச் சிலரே. இப்போது நாம் விவேகிகள் உகக்க நிரூபிக்குமிதனைக் கண்டு அவரவர்கள் தம்தம் கொள்கையை மாற்றிக் கொள்ளப் போகிறார்களென்று நமது ப்ரதீக்ஷையல்ல. இன்னமும் அதிகமாகவே பிடிவாதம் கொள்ளவுங்கூடும். ஆனாலும் சில பிராமாணிகர்களுக்காவது பயன் படுமென்றெண்ணியே இதில் ப்ரவர்த்திக்கிறோம்.

## — ஸ்ரீமான் வேங்கட தனியனுக்கு உத்ஸவமில்லாமை ஏன்? —

66. தனியனுக்கு ஒரு மஹோத்ஸவம் கொண்டாட வேணுமென்று ஆசைகொண்டாலும், உண்மையில் எது தனியனோ, எது மிக்க பெரும் புகழ் படைத்ததோ அதற்கன்றோ உத்ஸவம் கொண்டாட வேண்டும். **ஸ்ரீமான் வேங்கடநாத** தனியனே உண்மையான பெருமையுடையது. தேசிகனுக்கு எவ்வளவு பெருமையுண்டோ அவ்வளவு பெருமை இந்தத் தனியனுக்கு முண்டென்றால் மிகையாகாது. இதுவே ஸகல ஸஜ்ஜந பரிக்ருஹீதம். இதுவே தேசிகனுடைய திருவவதார ஸ்தலத்திலும் ஸமயவிசேஷங்களில் மேன்மைபெற்று விளங்குவது. இதுவே ஒருவிதமான பங்கத்தையும் பெறாதது. இதுவே தேசிகன் காலத்தில் அவதரித்தது. இதுவே நாடு நகரமெங்கும் பரவியது. மற்றொரு தனியனும் அப்போதே அவதரித்தது என்பவர்களுங்கூட **ஸ்ரீமான் வேங்கட** தனியனே முந்துறமுன்னம் அவதரித்ததென்பதை இதுவரையில் மறைத்திலர், மறுத்திலர். பாத்திரத் தனியன் பிறப்பதற்குமுன் ஒன்பதேகால் வருஷத்திற்கு முன்னமே **ஸ்ரீமான்** தனியன் அவதரித்ததாக எழுதியுள்ளார்கள். பல சிறப்புக்கள் பெற்ற அந்தத் தனியனை அநாதரித்து, சண்டைத் தனியனுக்குச் சிறப்புச் செய்ய முயல்பவர்களின் கருத்து என்னே? **ஸ்ரீமான் வேங்கட** தனியனுக்காக ஒரு சிறப்பு நடத்துகிறோமென்றால் இதில் ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸமரஸர்களாய்க் கூடியிருந்து அனுபவித்துக் குளிரக்கூடும். புதியதொரு கட்டிடத்தில் நடத்துவதைவிட்டு ஒன்றான தூப்புல் தேசிகன் ஸந்நிதியிலேயே இதை நடத்தவுங்கூடும். தேசிகன் திருவுள்ளமும் உகக்கக் கூடும். யுக்தமென்று உலகமும் புகழக்கூடும்.

## — ஒருவர்க்கு இரண்டு தனியன் அஸம்பாவிதம் —

67. இனி இந்த பாத்திரத் தனியன் ஜனித்து 600 வருஷம் ஆயினவென்பது உண்மைதானு? என்று பரிசீலிப்போம். ஏற்கெனவே **ஸ்ரீமான் வேங்கட** தனியன் அவதரித்து வீறுபெற்றிருக்கும்போது இந்த பாத்திரத் தனியன் பிறக்க என்ன ப்ரஸக்தி? ஸம்ஸ்க்ருதக்ரந்த காலக்ஷேபத்திற்காக அந்தத் தனியனும், த்ராவிட க்ரந்த காலக்ஷேபத்திற்காக இந்தத் தனியனும் தோன்றினதாகக் கூறுகின்ருர்கள். ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானுர் எம்பார் ஆழ்வான் பட்டர் பிள்ளான் அம்மாள் அப்புள்ளார் முதலான ஸகல ஆசார்யர்களுக்கும் எந்த க்ரந்த காலக்ஷேபத்திலும் ஒரு தனியன்தான் வழங்குவதாக உள்ளது. ஸமாச்ரயண பரம்பரைக்காக மூன்ருவதொரு தனியன் ஏற்படவேண்டாவோ? ஒவ்வொரு க்ரந்தத்திற்கும் ஒவ்வொருதனியன் ஏற்படவேண்டாவோ? த்ராவிட க்ரந்த காலக்ஷேபத்திற்காகத் தனியே ஒரு தனியன் ஏற்பட்டதென்ருல் அது தமிழ்ப்பாசுரமாக இருந்தாலாவது இசையலாம். ஏற்கெனவே உள்ள தனியனில் என்ன குறைகண்டு புதிய தனியன் இயற்றினுர்களென்பது தெரியவேணும். ஸ்ரீமாந் வேங்கட தனியனில் தேசிகனுடைய ஆசாரியரைப்பற்றி ப்ரஸ்தாவமில்லாமையாலே ஒரு குறையிருந்ததென்றும், அக் குறைதீர ராமானுஜ தயாபாத்ரத் தனியன் ஏற்பட்டதென்றும் எழுதியுள்ளார்கள். அப்படியானுல், குறையோடு கூடின அந்தத் தனியன் லுப்தமாகி இதுவேயன்ருே ஸர்வஜநீநமாகப் பரிக்ருஹீதமாகவேணும்.

## — இதை முக்கியமாகக் குறிக்கொள்வது —

68. மணவாள மாமுனிகளுக்கு **ஸ்ரீசைலேச தயாபாத்ரத்** தனியன் திருவவதரிப்பதற்கு முன்னே வேருெரு தனியன் அவசியம் இருந்திருக்கவேணும். ஒரு ஸம்வத்ஸர காலம் மாமுனிகள் திருவடிகளிலே ஈடுஸேவித்தவர்கள் ஒரு தனியனைச் சொல்லித்தானே ஸேவித்திருக்கவேண்டும். அந்தத்தனியன் இப்போது யாருக்காவது தெரிந்துள்ளதோ? முக்கியமானதொன்று அவதரித்துவிட்டால் அமுக்கியமானது அடங்கிவிடுமன்ருே. ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் தேசிகன் காலத்தில் ஜனித்திருந்து உகக்கப்பட்டிருக்குமாகில் பிறகு ஸ்ரீமாந் வேங்கட தனியன் ஜீவித்திருக்க நியாயமுண்டோ? ஸகல ஸந்தர்ப்பங்களிலும் இந்த பாத்திரத் தனியனையே அநுஸந்திக்க என்ன தடை? இதை விவேகிகள் ஆராயலாகாதா? ஏற்கெனவே சிஷ்டபரிக்ருஹீதமாயிருந்த ஸ்ரீமான் வேங்கட தனியனுக்கு லோபம் செய்யக் கூடாமையாலே அதற்கும் ப்ரசாரமிருக்கவேணுமென்று கருதி ஒரு வ்யவஸ்தை பண்ணினுர்கள் என்னில்; இங்கே கவனிப்பது:—நம்மாழ்வாருடைய தனியனுக இப்போது உலகில் வழங்கி வருகின்றது * மாதாபிதா யுவதயः * என்கிற (ஆளவந்தாரருளிய) ச்லோகம். இது அவதரிப்பதற்கு முன்னே பல ஆசாரியர்கள் நம்மாழ்வாருக்குத் தனியன் அநுஸந்தியாமலிருந்திருக்கவில்லை. **ஸ்ரீ** மதுரகவிகள் **ஸ்ரீ**மந்நாதமுனிகள் உய்யக்கொண்டார் மணக்கால்

நம்பி முதலானவர்கள் பல்லாயிரவர் அநுஸந்தித்த ஆழ்வார் தனியன் எங்கே? என்றால் என்ன பதில் சொல்லுவோம். ஒரு காலத்தில் ஒரு தனியனுக்கு ப்ராபல்யம் ஏற்பட்டுவிட்டால், மற்ற தனியன் தன்னடையே மறைந்து போகுமன்றோ? மறைய வேணுமென்கிற அவசியமுமில்லை. ப்ரதானத்தனியன் என்கிற பெயர் பெறாமல் அதுவும் ஸாமாந்யஸ்தோத்ர ச்லோக ரூபமாக ஒருபுறம் இருக்கலாம். ஸமமான இரண்டு தனியன் அஸம்பாவிதம்.

## — நவீனர்களின் வீணான முயற்சியின் விபரீதபலன் —

69. ஸ்துதிரூபமான ஒரு பத்யமோ பாசுரமோ தனியனென்று வழங்கப்படுகிறது. ஒரு ஆசார்யருக்கு இப்படிப்பட்ட ஸ்துதிபத்யங்கள் பலபலவும் இருக்கலாம். ஆளவந்தார்க்கு * **ஸ்வாதயந்நிஹ** * **நமோ நமோ யாமுநாய** * இத்யாதிகளான பல ச்லோகங்கள் உண்டு. எம்பெருமானார்க்கு * **வந்தே வேதாந்த கர்ப்பூர** * இத்யாதி ச்லோகங்கள் பல்லாயிர முண்டு. இருந்தாலும் ஒரு ஆசார்யருக்கு ஒரு தனியன்தான் **அஸாதாரணமாக** அமையும்; அங்ஙனம் அஸாதாரணமான தனியன் தேசிகனுக்கு எது? என்றால், **ஸ்ரீமான் வேங்கடநாதார்ய:** என்பதேயாம். 'இதுவன்று' என்று யாரேனும் சொல்லவொண்ணுமோ? மிக நவீனமான ராமாநுஜ தயா பாத்ரத் தனியனை ப்ராசீநம்போல் காட்டுவதற்கு இவர்கள் செய்த முயற்சி இதனுடைய நவீநத்வத்தையே நன்கு ஸ்தாபித்துக் கொடுக்கின்றதென் பதை யார்தாமறியார்?

## — பரிஹாஸ்மான ச்லோக கல்பனை —

70. இந்தத் தனியன் பிறந்த காலத்தைக் குறிப்பிடுவதாக ஒருசுலோகம் காலஞ்சென்ற சேட்லூர் நரஸிம்ஹாசார்யர் வெளியிட்டிருக்கிறார் [தேசிக சரித்திரத்தில் பக்கம் 45ல்.] [**கல்யப்தேஷு சதுஸ்ஸஹஸ்ர சத பங்க்த்யப்தே.......ஸு ச்லோகோவததார தீவ்யமஹிமா ராமாநுஜோக்த்யாதிம:**] என்பதே அது. இதைப்பற்றி நமக்குப் பல விஷயங்கள் விவக்ஷிதங்கள். விவேகிகளை நோக்கியே விளம்புகின்றோம். [ஏற்கெனவே மிக விரிவாக எழுதி வெளியிட்டவற்றின் சுருக்கம்.]

## — அவ்யுத்பந்நகல்பித ச்லோகமென்பதை நிலைநாட்டுதல் —

71. * **சதுஸ்ஸஹஸ்ரசதபங்க்த்யப்தே** * என்கிற பதம் வ்யுத்பந்நர் பிரயோகிப்பதன்று. சேட்லூர் பண்டிதரின் கவனம் இது என்பது இதனாலேயே ஸுஸ்பஷ்டம். "கலிஹூ நாலாயிரத்து நானூற்று நாற்பதாவதில்" என்னும் விவக்ஷைக்கு இந்த பதம் ஒரு காலும் வாசகமாகாது. (சது:) என்பதை மேலுள்ள ஒவ்வொரு லக்கத்தோடும் சேர்த்துக் கொண்டாலும் [4440-வருஷங்கள்] என்று பொருள்படுமேயல்லது விவக்ஷிதமான ஒரு வருஷத்தை, (அதாவது 4440-ஆவது வருஷத்தில் என்கிற பொருளை) ஒரு நாளும் காட்டாது. இந்த மருமத்தையறிந்துகொள்ள ஸம்ஸ்க்ருத

பாஷையில் ஆழ்ந்த வ்யுத்பத்தி வேணும். (அப்தே) என்று ஏகவசன மிருக்கையாலே ஒரு வருஷத்தைத் தான் சொல்லும் என்பர் அறிவிலிகள். வியாகரணத்தில் (*ஸங்க்யா பூர்வோ த்விகு: * த்விகுரேகவசநம்) என்கிற அநுசாஸநத்தினலன்றே இந்த ஏகவசநம் ப்ராப்தமாகிறது. 4440 வருஷங்கள் என்று அத்தனை வருஷங்களையும் இச்சொல் காட்டியே தீரும். (ஆங்கிலத்தில் Five o'clock என்பதற்கும் Five hours என்பதற்கும் உள்ள வாசியை அறியுமவர்கள் இங்கு விவாதப்பட மாட்டார்கள்.) பஞ்ச வர்ஷே என்பதற்கும் 'பஞ்சமவர்ஷே' என்பதற்கும் நெடுவாசியுண்டு.

### — ஓலையேட்டில் காட்டமுடியாத அஸம்பத்தங்கள் —

72. ஸங்கல்பஸூர்யோதயத்தில் (விம்சத்யப்தே விச்ருத நாநா வித வித்ய:) என்று ஸ்வாமி அருளிச் செய்கிறார். விம்சத்யப்தே என்பதற்கு 'இருபதாவது வயதிலே' என்று பொருளன்று. மொத்தம் 20 வருஷ காலம் சிரமப்பட்டு என்பதே அங்கு அர்த்தம். அதுபோல் இங்கும் 4440 வருஷ காலம் சிரமப்பட்டு ஒருவர் இந்தத் தனியனை இயற்றினர். என்று பொருளாகுமேயன்றி 4440-வது வருஷத்தில் இது பிறந்தது என்பதாகப் பொருள்பட வழியில்லை. பங்க்தி என்பது (தச) என்பதற்குப் பர்யாயம். அதை எப்படி பிரயோகிக்கவேணுமென்பதை உணராமல் வெகு சிரமப்பட்டு ச்லோகமியற்றி விட்டார். இதை ஒரு ஓலைச்சுவடியில் இவர்கள் காட்டமுடியாதென்பதை சபதமிட்டுரைப்பேன். இந்த சுலோகம் மாத்திரமே கல்பிதமென்கிறேமல்லோம்; இந்தப் பாத்திரத் தனியன் இன்னஞு இன்னமீ^ர^ இன்ன நாளில் அவதரித்ததென்று கூறுகிற வார்த்தை வசனநடையாகவும் ஒரு ஓலையேட்டில் காட்டமுடியாதென்பதையும் ஸத்தியமாகக் கூறுவோம்.

### — லக்கத்தைத் தெரிவிக்கும் வழியும் விபரீதம் —

73. அன்றியும், லக்கத்தைத் தெரிவிக்க வேண்டு மிடங்களில் * கடபயாதிஸம்ஜ்ஞாரீதியில் சுலோகமியற்றுவதுதான் பிராசீநர்களின் வழக்கம். மற்றுஞ்சில ரீதிகளுமுண்டு. இங்ஙனே ஸங்க்யாவாசக சப்தத்தை நேரேயிட்டு இயற்றப்படுவது கிடையாது. இது கொண்டே சுலோகம் பாத்திரத்தனியன் போலவே பச்சாத் கல்பிதமென்பது கல்வெட்டாம்.

### — ஸ்ரீதேசிகாவதார வருஷத்திலேயே விவாதம் —

74. ஒரு தனியன் பிறந்ததற்காக அந்த காலத்தைத் தெரிவிக்க வேண்டி கல்யப்தம் முதற்கொண்டு திதி வார நக்ஷத்ராதிகளை யெல்லாம் தெரிவித்து ச்லோகம் இயற்றவேண்டிய அவசியம் என்ன? என்பதை விவேகிகள் விமர்சிக்கவேண்டும். ஸ்ரீமாந் வேங்கட தனியன் அவதரித்த காலத்தைப்பற்றி ஒரு ச்லோகமும் காணேமே. தேசிகனுடைய திருவவதாரத்தைப்பற்றி இங்ஙனே ஒரு சுலோகமுண்டோ? தேசிக சரித்ரபரமான எந்த புஸ்தகத்தையும் எடுத்துக் கொள்ளலாம். நாம் பல நூல்களையும்

பரிசீலித்திருக்கிறோம். * பாத்ரபதமாஸகத விஷ்ணுவிமலர்க்ஷே * என்பது போலவேயுள்ள சுலோகங்களினால் "புரட்டாசித் திருவோணத்தில் திருவவதரித்தார்" என்றிவ்வளவே கிடைக்கின்றது. விபவ வருஷத்தில் என்பார் சிலரும், சுக்ல வருஷத்தில் என்பார் சிலருமாய் நாளைக்கும் போராடிக் கொண்டிருப்பது அபலபிக்கவொண்ணாதது. இதைப்பற்றின வாதப்போர் வேதாந்த தீபிகையிலேயே நிகழ்ந்துளது; நாமும் அதைப்பற்றி ஒரு க்ரந்தம் வடமொழியிலும் தென்மொழியிலும் ப்ரபவ வருஷத்தில் வெளியிட்டிருக்கிறோம். ஒன்றான தேசிகனுடைய அவதார காலநிர்ணயத்திற்கே ஒரு சுலோகம் கிடைக்காமலிருக்கும்போது சண்டைத் தனியனுடைய ஜநநத்திற்கு ஒரு ப்ரஹ்மாண்டமான ச்லோகம் காட்டப்படுவதனால் புதியதைப் பழையதென்றுகாட்ட எவ்வளவோ பாடு பட்டிருக்கிறார்களென்பது தெரியவருகின்றதன்றோ.

## — புதியதைப் பழையதாகக் காட்ட வீண் ப்ரயாஸம் —

75. தேசிகன் ஓரிரவில் ஒரு யாமத்தில் அத்யாச்சர்யமான பாதுகா ஸஹஸ்ரத்தை அருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமாகச் சொல்லி வருகிறோம். இது அவதரித்தது எந்த வருஷத்தில் எந்த மாஸத்தில் எந்த நாளில் என்பதைப்பற்றி ஒருவரும் ஒருவரியும் எழுதிவைக்கவில்லை. பிறந்தநாள் முதலாக நீதி ஸ்தலங்கள் தோறும் பங்கப்பட்டு வருகிற வொரு தனியனுக்கு கல்யப்தம் முதற்கொண்டு எழுதிவைத்திருக்கிறார்களென்றால் இந்த வேலைத்திறம் மிக மெச்சத்தக்கதே. ஆக இவ்வளவான நிரூபணங்களினால் பாத்ரத்தனியன் புரதானமன்று என்பதும், புராதனமென்று காட்டிக்கொள்ள ப்ரயாஸப்பட்டிருக்கிறார்களென்பதும் தேறிற்று. கண்ணழிவு சொல்ல முடியாத பற்பல ஹேதுக்களினால் இதனை இன்னமும் ஸ்தாபிப்போம்.

## — ராமாநுஜபாத்ரத் தனியன் புதிது புதிது புதிதே —

76. ஸம்ஸ்க்ருத க்ரந்தகாலக்ஷேபத்திற்கு ஸ்ரீமாந் வேங்கட தனியனும், த்ராவிட-மணிப்ரவாள க்ரந்த காலக்ஷேபத்திற்கு பாத்திரத்தனியனுமாக ஸ்வாமி தேசிகனே வ்யவஸ்தை பண்ணி நியமித்தருளினர் என்று இவர்கள் எழுதியுள்ளார்கள். தேசிக திவ்யக்ரந்தங்கள் யாவும் ஓலையேடுகளில் நாளைக்கும் ஸம்ரக்ஷிக்கப்பட்டு வருகின்றன. திருமாளிகைகளிலும் மடங்களிலும் ஆங்காங்கு ஸுப்ரஸித்தங்களான (கனிமரா லைப்ரெரி முதலிய) ராஜகீய புஸ்தகாலயங்களினும் ப்ராசீந தாளகோசங்கள் பாங்காகப் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. 10, 15 இடங்களில் இதம்பரமாக நாம் சென்று உண்மைதெரிந்து கொள்ளப் பரிசீலித்திருக்கிறோம். தேசிகனுடைய வடமொழி நூல்களோடு தென்மொழி நூல்களோடு வாசியற எல்லாவற்றிலும் ஸ்ரீமாந்வேங்கடதனியன் ஒன்றேதிகழ்கின்றது. பாத்திரத்தனியன் ஒன்றிலாவது காணக்கிடைக்குமோ என்று நாம் பெருமுயற்சிகள் செய்து பார்த்தும் ஒன்றிலும் கிடைக்கவில்லை. கிடைக்கின்ற

தென்று கண்டு காண்பிக்கவல்ல மஹான்கள் உளரேல் தாராளமாக முன் வரலாமென்று இருபதாண்டுகட்குமுன் பறைசாற்றினோம். இத்தனியன் ஓலை ஸ்ரீகோசங்களில் காணப்படவில்லையென்று ப்ராமாணிகரான திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி யொருவர் ஸாதித்தார்.

## — ராமாநுஜ பாத்திரத்தனியன் ஓலையேடுகளில் காணாததோடு அச்சிலும் காணாத அருமை.—

77. மேலும், ஓலை ஸ்ரீகோசங்கள் வரையில் போக வேண்டிய அவசியமுமில்லை. கோவில் விவாதங்களில் ஸம்பந்தப்படாதவர்களும் ஸாதுக்களுமான பெரியார்கள் அச்சிடுவித்திருக்கின்ற தேசிக ரஹஸ்ய-வ்யாக்யாநாதி க்ரந்தங்களையெடுத்துப் பார்ப்போம். அவற்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் தவிர இந்த பாத்திரத் தனியன் தலைகாட்டவில்லையே. ஸந்நிதி விவாதங்களில் கைதேறின ஆக்ரஹிகளான பிற்காலத்தவர்கள் அச்சிடுவித்துவரும் தேசிக க்ரந்தங்களில் இந்த பாத்திரத்தனியனையும் நுழைத்துப்பதிப்பித்து வருகிறார்களென்பது உள்ளது.

## — ஸ்ரீமத் வில்லியம்பாக்கம் ஸ்வாமி முதலானோர் பதிப்புகளின் பாங்கு —

78. காஞ்சீபுரத்தில் வ்யபதிஷ்டராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ வில்லியம் பாக்கம்ஸ்வாமி தாமே சோதித்துப் பதிப்பித்திருக்கும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் இந்தத் தனியன் நுழைந்திருப்பதுண்டாவென்று நோக்குமின். தேசிகக்ரந்தங்களில் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் மிகவும் முக்கியமென்பது நிர்விவாதம். அதற்கு ஸாராஸ்வாதிநீவியாக்கியானம் ப்ரதாநதமம் என்பதும் ப்ரஸித்தம். அந்த வியாக்யானத்தின் தொடக்கத்தில் அந்த வ்யாக்யாதாவின் கையினால் எழுதியிருக்கும் தனியன் ஸ்ரீமாந் வேங்கட தனியனா? பாத்திரத் தனியனா? என்று [திருச்சேறைப் பதிப்பில்] பார்க்கலாம்., ஸ்வாமி தேசிகனே ஏதோ தனியன் வ்யவஸ்தை பண்ணினார் என்கிறார்களே; இது ஸாராஸ்வாதிநீகாரர்க்குத் தெரிந்திருக்கவில்லைபோலும். இதற்கெல்லாம் நவீனர்கள் பதில் சொல்லுவதாக வாய்திறக்க முடியுமா? அடியேனை நிந்திக்கவும் சபிக்கவும் முடியும்.

## — இதில் நாம் எவ்வளவு பாடுபட்டிருக்கிறோம் தெரியுமோ ? —

79. மணவாள மாமுனிகளின் எந்த க்ரந்தங்களையும் எடுத்துப் பார்க்கலாம்; தாள ஸ்ரீ கோசங்களோடு அச்சுப்புத்தகங்களோடு வாசியற எல்லாவற்றிலும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன்தான் இருந்து தீரும். ராமாநுஜ தயாபாத்ரத் தனியனுக்கு இங்ஙனே ஒரு ப்ராமாண்யம் லவலேசமாகிலும் காட்டக்கூடுமாவென்று கேட்கிறோம். அச்சுக்கூடங்களோடு கூடவே இத்தனியன் ஏற்பட்டதென்பதற்கு, அசைக்கமுடியாத நிரூபகங்கள் கிடைக்கும். இந்தத் தனியன் ஏறிய ஓலையேடு ஒன்றுகூட ஒருவரால் காட்ட முடியாதென்று துணிந்து கூறுகின்ற நாம் இவ்விஷ

யத்தில் எவ்வளவு பாடுபட்டு உண்மையைக் கண்டுபிடித்திருப்போமென் பதை அவரவர்கள் உள்ளத்துள்ளே ஊன்றியுணரலாம்.

## — இருபது ஆண்டுகளுக்கு முன்பு நாம் செய்த சபதம் —

80. "ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் திகழ்கின்ற ஓலை ஸ்ரீ கோசம் இதோவுள்ளது, காணாய்" என்று கம்பீரமாக கோஷித்து ஒரு ஸ்ரீகோசத்தையாவது ஸதஸ்ஸில் காட்ட நேருமா? அப்படி ஒருவர் காட்டி விடுவரேல், நாளது ஆவணிமாதத்தில் இவர்கள் செய்யப் பாரித்திருக்கும் பாத்ரோத்ஸவத்திற்குத் தேவையான பொருளுதவியை நாமே முன் னின்று செய்விப்போம்" என்று நாம் பல பத்ரிகைகளையச்சிட்டுப் பிரசுரம் செய்தும் ஒருவரும் எடுத்துக்காட்ட முன்வரவில்லை. இல்லாததை எங் ஙனே யெடுத்துக்காட்டமுடியும்?

## — சிலர் இங்ஙனே நினைக்கக்கூடும் —

81. இங்ஙனே நாம் துணிவுடன் எழுதுவதைக்காணும் சில தென்னாசார்ய மஹான்கள் என்ன நினைக்கக் கூடுமென்றால், "உண்மை யில் இந்த பாத்திரத் தனியன் ஏற்பட்டு 600 வருஷம் ஆகாவிடினும், சில ஸந்நிதிகளில் நேர்ந்துள்ள விவாதங்களை ஆராய்ந்து பார்க்குமிடத்தில் இந்தத்தனியன் ஏற்பட்டு, ஏறக்குறைய இருநூறுவருஷமாவது அவசியம் ஆகியிருக்குமென்று எண்ணவேண்டியதாகிறது. வாஸ்தவத்தில் கி. பி. பதினெட்டாவது நூற்றாண்டின் முற்பகுதியில் இத்தனியன் ஜனித்ததாக வும் தெரியவருகிறது. அத்தருணத்திற்குப் பின்பு பலபல ஓலை ஸ்ரீகோ சங்கள் ஏறியருளப் பண்ணப்பட்டிருக்கலாமே; அவற்றில் ஏதாவதொரு ஸ்ரீகோசத்தில் இந்த பாத்ரத் தனியன் சேர்த்து எழுதப்பட்டிருக்கவுங் கூடுமே; அப்படிப்பட்டவொரு சுவடியைக் கொணர்ந்து காட்டிவிட்டால் அண்ணங்கராசாரியர் என் செய்வர்!" என்று நினைக்கக்கூடும்.

## — அங்ஙனேநினைக்க அவகாசலேசமுமில்லை —

82. ஆரியர்காள்! ஓலை ஸ்ரீ கோசங்களை ஆராய்ச்சி செய்வதற் காக நாம் அடிக்கடி பலதலங்களுக்குச் செல்வதுண்டு. நம்முடைய க்ரந் தங்களையெல்லாம் ஊன்றி நோக்குமவர்கள் இத்தகைய பரிச்ரமம் நமக்கு நெடுநாளாக வுண்டென்பதை நன்கறிவார்கள். அங்ஙனம் செல்லுமிடங் களில் இந்த ராமாநுஜதயாபாத்ரத் தனியன் விஷயமான ஆராய்ச்சியை யும் நாம்செய்வது வழக்கம். ஏனென்றால், (1) சில திவ்யதேசங்களில் இத்தனியன் ஸம்பந்தமான சச்சரவே அதிகரித்திருப்பதாலும், (2) இத் தனியனைச் சிலவிடங்களில் வாயாற் சொன்னதற்கும் சொல்ல நினைத்த தற்கும் ராஜதண்டனைகள் ஏற்பட்டிருப்பதாலும், (3) இத்தனியனில் பற்று வைத்தது காரணமாகவே ஸ்ரீ தாதாசார்ய வம்சஸ்தர்கள் பல திவ்யதேசங் களில் தங்களுடைய சிறந்த மரியாதைகளை அநியாயமாய் இழக்க நேர்ந்து

விட்டதென்று ஸ்ரீபெரும்பூதூர் வியவஹாரத்தில் கனம் ஹைகோர்ட்டு ஜட்ஜ்கள் தெரிந்து பரிதாபத்தோடு எழுதியிருக்கிறபடியாலும், (4) காஞ்சீபுரத்தில் மஹாவ்யாபகராகவும் ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாவாகவும் எழுந்தருளியிருந்த திருப்புட்குழி ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான உ. வே. ஸ்ரீ க்ருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமி 1874வருஷத்தில் செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டு 72-நெ. தாவாவில் மிஸ்டர் குருல்துரை முன்னிலையில் பிரதிவாதியாக எழுந்தருளி "விளக்கொளி தேசிகன் ஸந்நிதிவாசலில் தென்கலைத் திருமண்தான் இருந்தது" என்றும், "6, 7 மாதத்திற்குமுன் நான் வெளியூர் போயிருந்தபோது யாரோ வடகலையார் அதையடித்து விட்டதாகக் கேள்விப்பட்டேன்" என்றும், "அந்த தேசிகன் ஸந்நிதியிலுங் கூடத் தென்கலையார்களே தென்கலை மந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவை செய்து வருகிறார்கள்" என்றும் 19-9-1874ல் ஸ்டேட்மெண்டு கொடுத்திருப்பது அப்படியே அச்சாகி வெளிவந்திருப்பதாலும் மற்றும் பல காரணங்களாலும் இத்தனியனைப்பற்றியும் தேசிக திருமண்காப்பைப்பற்றியும் உண்மையைக் கண்டுபிடிக்கவேணுமென்று அடியேனுக்கு நெடுநாளாகவே ஆவல் இருந்ததனால் பல ஆராய்ச்சிகள் செய்யலாயின. விவாத பாத்ரத்தனியன் ஏறியுள்ள ஓலை ஸ்ரீகோசம் ஓரிடத்திலாவது கிடைக்குமா என்று மிக அலைந்து பார்த்தும் ஒன்றுகூட அடியேனுக்குப் புலப்படவில்லை.

## — திருவுள்ளூர் ஸன்னிதியாசரணைகள் —

83. திருவெவ்வுளூர் முதலான நாலைந்து திவ்யதேசங்களில் இந்தத் தனியனுக்குச் சிலகாலமாய் ப்ரவேசமிருப்பது கொண்டும் உண்மையை மாற்றவொண்ணாது. இங்ஙனே சில திவ்ய தேசங்களை ஸ்தலவாஸிகள் பறிகொடுத்து விட்டாலும் அவ்விடங்களில் இடையில் ஸம்பவித்த கோளாறுகளையும் புராதநஸ்திதியையும் உள்ளபடி காட்டவல்ல ரிகார்டுகள் அழிந்து போகவில்லை. அடியேனுக்குத் தெரிந்தவரையில் திருவெவ்வுளூரிலும் திருவஹீந்திரபுரத்திலும் ஒருபெட்டி ரிகார்ட்டுகள் நாளைக்கும் சேமிக்கப்பட்டுள்ளன. அவற்றில் முக்கியமானவை அச்சாகி வெளிவந்து ப்ராமாணிகர்களை மகிழ்விக்கின்றன.

[திருவெவ்வுளூரில் ரிகார்டுகள் நீதிமன்றத்து விவாதத்தில் வெற்றிபெறுவிக்கவில்லையானாலும் அதைப்பற்றி நமக்கு விசாரமில்லை. ப்ராசீனஸ்திதியைத் தெரிவிக்கின்ற ரிகார்டுகளன்றோ அவை. மாமூலாகச் சொல்லிவந்த ஸ்ரீசைலேசத்தனியனை விட்டுப் புதிய ராமாநுஜ பாத்ரத்தனியனை அஹோபிலம் ஜீயர்ஸ்வாமிகள் சொன்னதற்காக எத்தனை தடவை அவர் ஷை ஸன்னிதி கைங்கர்யத்திலிருந்து விலக்கப்பட்டார்? புதுத்தனியனை இனிச்சொல்லுவதில்லை என்று ஜீயரே எத்தனை தடவை எழுதிக்கொடுத்தார் என்பதெல்லாம் நன்கு விளங்குகிறதே.]

**— வீணுகச்சிலர் மருள்வது பிசகு —**

84. மணவாளமாமுனிகளைக் காட்டிலும் வேதாந்ததேசிகன் முற்பட்டவராதலால், மாமுனிகளின் தனியனை **ஸ்ரீசைலேச தயாபாத்ரத்திற்** காட்டிலும் தேசிகனுடைய தனியனே முற்பட்டிருக்கத் தகுந்தது—என்று பொதுவாக அனைவரும் எண்ணக்கூடியது. மாமுனிகளின் தனியனைக்காட்டிலும் தேசிகன் தனியனே முற்பட்டதுஎன்பதுரிகவும் யுக்தம். அந்தத்தனியன் **ஸ்ரீமாந் வெங்கட நாதார்ய:** என்பதே யல்லது 'ராமாநுஜ தயாபாத்ரம்' என்பதல்ல என்று விசதமாக நிரூபித்தாயிற்று.

**— நடைபெறவேண்டியதும் நடைபெற்றுவருவதும் —**

85. மிகமுக்கியமான விஷயம் கேண்மின். திவ்யப்பிரபந்தங்களை அநுஸந்திக்கத் தொடங்கும்போதுகளில் உபகாரஸ்மிருதியாக ஆசார்யர்களின் தனியன்கள் அநுஸந்திக்க ப்ராப்தமானல் அவர்களுள் முற்பட்டவர்கள் யாவரோ அவர்களுடைய தனியன்களை அந்த வரிசைக் கிரமமாக அநுஸந்திப்பது முறைமையாகும். இங்ஙனேயாகுமிடத்து ஸ்ரீமந் நாதமுனிகள் போல்வாரான பூர்வாசார்யர்களுடைய தனியன் தான் முதன்மைபெறவேண்டும். * **சடகோப தயாபாத்ரம் ஜ்ஞானவைராக்ய சேவதிம். அகாதபகவத் பக்திம் வந்தே நாதமுனிம் குரும்** * என்று ஒரு தனியன் இருந்து திவ்யப்ரபந்தாரம்பங்களில் அநுஸந்திக்கப்பட்டு வந்திருக்குமாகில் நன்றே. ஆனல் அங்ஙனம் வந்திருக்கவில்லை. உடையவர் வரையில் அந்தந்த பிரபந்தங்களுக்கு அந்தந்த ஆழ்வார்களுடைய தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வந்தன. பிறகு கூரத்தாழ்வான் காலத்தில் * **லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்** * **யோ நித்யமச்யுத*****மாதாபிதாயுவதய:*** என்கிற தனியன்கள் ஸகலப்ரபந்தங்களுக்கும் பொதுத் தனியன்களாக அநுஸந்திக்கப்படுமாறு ஸங்கேதம் ஏற்பட்டது. பட்டர் காலத்தில் * **பூதம்ஸரச்ச மஹாதாஹ்வய** * என்கிற தனியனும் அவற்றோடு சேர்க்கப்பட்டது. இவை திவ்யப்ரபந்தாநுஸந்தான ஆரம்பத்திற்கு மாத்திரமே ஏற்பட்டன. அநுஸந்தாந முடிவில் ஒரு தனியனுமில்லை. வாழித்திருநாமமுமில்லை. முடிவில் பல்லாண்டு பல்லாண்டு என்று தொடங்கி 'அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே' என்று முடிப்பதுவே வழக்கமாயிருந்தது.

பிறகு மணவாளமாமுனிகளின் காலத்தில் ஏற்பட்ட விஷயங்கள் ஜகத்ப்ரஸித்தமானவை. அவை மாமுனிகளின் காலத்திலேயே அவருடைய சிஷ்யர்களால் சம்பூரூபமும் காவ்யரூபமும் ஸ்தோத்ரரூபமுமான க்ரந்தங்களில் வடமொழியிலும் தென்மொழியிலும் அமைக்கப்பட்டு விளங்குகின்றன. அவை புராதன ஓலை ஸ்ரீகோசங்களாக அநேகம் கிடைக்கின்றன. அவை எழுதப்பட்டு எத்தனை நூற்றாண்டுகள் ஆகியிருக்குமென்பதையும் தடஸ்தர்கள் ஊன்றிப் பார்க்கலாம். மாமுனிகளின் திருவடிகளில் ஒருவரான அப்பிள்ளையருளிச்செய்த நாள்பாட்டு வாழித்திருநாமத்தில் "இப்புவியிலரங்கேசர்க்கு ஈடளித்தான் வாழியே" என்றும் "எப்புவியும் சீசைல மேத்தவந்தோன் வாழியே" என்றும்

அமைக்கப்பட்டு நித்யாநுஸந்தானமாக வந்திருக்கிறது. இவ்விஷயங்களெல்லாம் 400 வருஷங்களுக்கு முற்பட்டவையாக மதிக்கக்கூடிய ஓலை ஸ்ரீகோசங்களில் பல ஆசார்ய புருஷர்களின் திருமாளிகைகளிலும் மடங்களிலும் ராஜகீய புஸ்தகாலயங்களிலும் காணக்கிடைக்கின்றன. கிம்பஹுநா? ஸ்ரீ தேசிகனுடைய திருவவதார ஸ்தலமான விளக்கொளி ஸந்நிதியுட்பட ஸகலஸந்நிதிகளிலும் ஸகல திவ்யதேசங்களிலும் தொன்று தொட்டு ஏகரூபமாக நடைபெற்று வருகின்ற ஆசாரம் அபலபிக்க முடியாதது. அத்தலங்களிலெல்லாம் ராமாநுஜ தயாபாத்ரமும் அதைச்சேர்ந்த வாழித்திருநாமம் முதலியவைகளுமே அநுஸந்தாநத்தில் இருந்துவந்தனவென்றும், இடையில் எப்போதோ மாறிவிட்டனவென்றும் இனி இவர்கள் சொல்லத் துணியவேண்டும். எதுவும் சொல்லிவிடலாம்; உலகம் நம்பவேணுமே. ஔசித்யமும் காணவேணுமே. பாத்திரத்தனியன் சண்டை புகுந்தவிடங்களில் "நூதனமாக இந்தப் பாத்திரம் தொடங்கினார்கள்" என்கிற ஹாஹாகாரமும் அதன்மேல் விசாரணைகளும் ராஜதண்டனைகளும் ஸுப்ரஸித்தமல்லவா? **ஸ்ரீ சைலேச தயாபாத்ரம்** நூதனமாகச் சொல்லத் தொடங்கினார்களென்று ஒரு தலத்திலாவது ஒரு பேச்சாகிலும் கிளம்பினதுண்டோ? ஆக்ரமித்தல், இழத்தல் என்று இரண்டு உண்டு; ஆக்ரமிப்பவர்கள் யார்? இழப்பவர்கள் யார்? என்பதை உலகமறிந்தேயுள்ளது.

### — அசைக்கவொண்ணாத ஸத்யமானவிஷயம் —

86. மருமமறியாத சிலர்—"தேசிகனுக்கு திவ்யப்ரபந்தங்களில் ஈடுபாடு இல்லையா? அவற்றை இவர் காப்பாற்றவில்லையா? வளர்க்கவில்லையா? அவற்றுக்காக இவர் எவ்வளவோ பாடுபட்டிருக்கவில்லையா? இவருடைய தனியனில் எதற்காக விப்ரதிபத்திகொள்ளவேணும்" என்று வாதிக்கிறார்கள். கேண்மின்; நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான்பட்டர் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் திருவாய்மொழிப்பிள்ளைமுதலான ஆசார்யர்களுக்கும்இந்தப்பெருமைகள்இல்லையா? இல்லையென்று வாய்திறக்கமுடியுமா? இருந்தாலும் அன்னவர்களில் ஒருவருடைய தனியனும் இத்தகைய கௌரவம் பெறவில்லையென்பது யாவரும் இசைந்த விஷயம். விலக்ஷணமானவொரு பகவந்நியமந விசேஷத்தினால் ஒரு ஆசார்யருடைய தனியனுக்கும் வாழித் திருநாமத்திற்குமே இத்தகைய பெருமை ஏற்பட்டது **அந்த ஆசார்யர் மணவாளமாமுனிகள் ஒருவரேயன்றி மற்றொருவரல்லர்** என்னுமிடம் அசைக்கவொண்ணாதது.

### — இந்த வினாவுக்கு விடைதருவீர்களா? —

87. ராமாநுஜதயாபாத்ரம் தேசிகன் காலத்திலேயே அவதரித்து அப்போதே ஸந்நிதிகளிலும் க்ருஹாதிகளிலும் பிரசாரமும் பெற்று மேன்மையடைந்திருக்குமாகில் அந்த அநுஸந்தாந பரம்பரை இடையறாமல் வந்தேயிருக்கும். ஓரிடத்திலும் விச்சேதமடையக் காரணமில்லை. அப்போது ஸ்ரீவைஷ்ணவர்களுள் வேற்றுமையென்பது சிறி

தும் ஏற்பட்டிருக்கவில்லையாதலால் ராமாநுஜதயாபாத்ரத்தையும் அதைச் சேர்ந்த வாழித்திருநாமத்தையும் தேசிகப்பிரபந்தாதிகளையும் அப்போது ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸந்நிதிகளில் ஆதரித்துப் பரிக்ரஹித்தே யிருப்பார்கள்; அந்த ரீதி மாறுபாடடையக் காரணமேகிடையாது. தேசிகனிடத்தில் பகையும் பொறாமையும் கொண்டவர்கள் அக்காலத்திலு மிருந்தார்களென்று சொல்லி அதனால் வேறுபாடு உண்டானதாகச் சொல்லித் தீரவேண்டுமிவர்கள். உண்மை அப்படி இருக்குமானால் அந்த ஸமயத்திலேயே பிள்ளை லோகாசார்யர் விஷயமான தனியன் வாழி திருநாமங்கள் அதற்குப் போட்டியாக ஏற்பட்டிருக்கும். 70, 80 வருஷங்கள் பொறுத்து மணவாள மாமுனிகளின் தனியனும் வாழித்திருநாமமும் போட்டியாக வந்து புகுரமாட்டாதென்பது திண்ணம். அந்தோ! இதை ஆராயமாட்டிற்றிலரே நவீனர்கள்; கலி௵ 4140ல் ராமாநுஜதயாபாத்ரம் ஜனித்து அப்போதே ஸந்நிதிகளிலும் பிரசாரம் அடைந்திருந்ததாகவே வைத்துக்கொள்வோம். அப்போது அந்தத் தனியன் முதலியவற்றை ஸந்நிதிகளில் ஓதிவந்த அத்யாபகர்கள் யாவர்? அவர்களுடைய பரம்பரை இப்போது இருக்கின்றதா இல்லையா? என்று விமர்சிக்க வேண்டும். இவ்வாராய்ச்சிகளையெல்லாம் நாம் செவ்வனே செய்து பலபல உண்மைகளை உலகமுகக்க வெளியிட்டிருக்கிறோம் பலகால்.

## — ஆச்சரியமான ஷாட்குண்யரி பூர்த்தி —

88. இக்காலத்தில் நாம் ஸேவித்துவரும் ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்தில் ஒரு வகுப்பு—திவ்யப்ரபந்தங்களில் அபிமானமுடையதும், மற்றொரு வகுப்பு—அந்த அபிமானமற்றதுமாயுள்ள தென்னுமிடம் மறுக்கவொண்ணாதது. அபிமானமற்ற வகுப்பினர்கள் (1) வைதிக கர்மாநுஷ்டாநங்களில் அதிக நோக்குடையவர்களாயும், (2) குளக்கரைகளிலேயே பெரும்பாலும் போதுபோக்குமவர்களாயும் (3) ஸந்நிதிகளில் வந்தாலும் நூற்றுக்கணக்கான நமஸ்கார ப்ரதக்ஷிணாதிகளைச் செய்துவிட்டு * ஆசுச்சிராநः* இத்யாதிகளை ஓதி மீள்பவர்களாயும், (4) திவ்யப்ரபந்த ஸேவைகளில் இகழ்வுடையராயும், (5) 'இப்பாட்டுகள் அவைதிகசப்தம்' என்றுசொல்லி அதிலே சிறிதும் செவிகொடாதவர்களாயும், (6) இயல் நடக்குமிடங்களில் தலைகாட்டவும் விரும்பாதவர்களாயும் இங்ஙனே ஷாட்குண்ய பரிபூர்ணர்களாய் இருந்து வந்தவர்கள். [இன்னமும் பலர் இப்படியேயிருந்து வருகிறார்கள்.]

22—7—38ல் வெளிவந்த சுதேசமித்திரனில் ராமாநுஜ தயாபாத்ர மஹோத்ஸவமென்ற மகுடத்தின்கீழ் உ. வே. வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகள் வடகலையார்கள் வெகுகாலமாகவே திவ்யப்ரபந்தங்களில் நிராதரவு காட்டி வருகிறார்களென்று தாம் பரிதாபம்காட்டி யெழுதியிருப்பது கொண்டும் உண்மையை யுணரலாம்.

மூன்றும் பரிச்சேதம் முற்றிற்று.

# நான்காவது பரிச்சேதம்.

இந்த பரிச்சேதத்தில் நாம் எழுதும் விஷயங்களுக்கு கோபதாப மில்லாமல் ஆர்ஜவத்துடன் பதில் வெளிவருமா? வெளிவராதவரையில் இவர்களின் கற்பனைகளெல்லாம் வீண் சண்டைக்காகவே ஏற்பட்டன வென்பது கல்வெட்டாகும். ஏற்கெனவே கல்வெட்டாகியே யுள்ளது.

**— பிராமாணிகரான வொருவரை நோக்கி நாம் கேட்கும் கேள்வி —**

89. ராமாநுஜதயாபாத்ரம்—ஸ்ரீசைலேச தயாபாத்ரம் என்கிற தனியன்களைப்பற்றி நன்ருக ஆராய்வது. இந்த இரண்டு ச்லோகங்களை யும் பார்க்கும்போது இரண்டும் ஒரே சாயலாக இருப்பதாலும், இது தவிர, நமோ ராமாநுஜார்யாய—நமச் ஸ்ரீசைலநாதாய; வாழியிராமானுசப் பிள்ளான்—வாழி திருவாய் மொழிப்பிள்ளை; தேறும்படி யுரைக்குஞ்சீர்—தேறும்படி யுரைக்குஞ்சீர்; வஞ்சப்பலசமயம் மாற்றவந்தோன் வாழியே; செய்யதாமரைத்தாளிணை வாழியே. நானிலமுந்தான் வாழ நான்மறைகள் தாம் வாழ—அடியார்கள் வாழ அரங்கநகர்வாழ; இன்னமொரு நூற்றாண் டிரும்—இன்னமொரு நூற்றாண்டிரும்=ஆக இப்படி ஒவ்வொன்றும் ஒரே சாயலாக இருப்பதாலும் ஒன்றைப் பார்த்து மற்றொன்று காப்பி யடித்ததென்று நிச்சயமாகச் சொல்லும்படி யிருக்கின்றதல்லவா? எதைப் பார்த்து எது காப்பியடித்ததென்கிற விசாரம் இப்போது வேண்டாம். முன்னே யிருந்த நிகழ்ச்சி ஒன்று; அதைப் பார்த்து அதே விதமாகப் பின்னே ஏற்படுத்தினது மற்றொன்று என்று சொல்லும்படி யில்லையா? நடுநிலையில் நின்று ஸாதிக்கவேணும் என்று பிராமாணிகரானவொரு வடகலை ஸ்வாமியைக் கேட்டால் அவர் சொல்லக்கூடிய பதில் ;—

**— நமது கேள்விக்குப் பிராமாணிகர் சொல்லக் கூடிய பதில் —**

90. இதில் என்ன ஸந்தேகம்? ஒன்று முன்னேயிருந்தது; அதைப்பார்த்து மற்றொன்று அதே விதமாக பெயர்களையும் விசேஷணங் களையும் மட்டும் மாறுபடுத்தி அநுஷ்டுப்புக்கு அநுஷ்டுப்பு, வெண்பாவுக்கு வெண்பா; ஆசிரியத்திற்கு ஆசிரியம்; தொங்கலுக்குத் தொங்கல்= இப்படியாக வைரக்கமலத்திற்கு ரங்கூன் டைமண்ட் போல பிறகு ஏற்பாடு செய்யப்பட்ட தென்பதில் என்ன சந்தேகம்? விஷ்ணு கோவில்களில் சடகோபம் என்று வைத்து எல்லார் தலையிலும் சாதிப்பதைப் பார்த்தவர் கள் அதேமாதிரி சிவன் கோவிலிலும் வைத்து அதற்கு ஜடகோபுரம் என்று பேரும் வைத்து "ஜடகோபுரம் தரிச்சுக்குங்கோ" என்று தலையில் மொட்டுவதைப் பார்த்து வருகிறோமல்லவா? இப்படி எத்த னையோ இமிடேஷன்கள் ஏற்பட்டிருக்கின்றன; தினே தினே ஏற்பட்டுக் கொண்டு மிருக்கின்றன. அதுகளிலே இது தலையானது என்பதில் என்ன சந்தேகம்? இதை ஒருவர் சொல்லித்தானு தெரிந்துகொள்ளவேண்டும்? இது சிறுவர்களுக்கும் வெட்டவெளிச்சமல்லவா? என்பதேயாம்.

**— இதை மறுக்க முடியுமானால் கம்பீரமாக முன் வரலாம் —**

91. "மணவாளமா முனிகளுக்கு ஸ்ரீசைலேச தயாபாத்ரம் என்கிற ஒரு தனியன் தவிர வேறு தனியன் எந்த பரம்பரையிலும் கிடையாதென்பது உலகமறிந்த விஷயம். அதே மாதிரி தேசிகனுக்கும் ராமாநுஜதயாபாத்ரம் என்கிற தனியன் தவிர வேறு தனியன் இல்லாம லிருந்திருக்குமானால், மணவாளமா முனிகளைவிட தேசிகன் முற்பட்டவ ராகையாலே தேசிகருடைய அந்த பாத்ரதனியன்தான் முற்பட்டதென் றும், பிற்பாடு அதைப் பார்த்தே அதே சாயலாகவே மணவாளமா முனி களுக்கு ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன் கற்பிக்கப்பட்டதென்றும் அநாயாஸமாகத் தேறிவிடும். எந்த பரம்பரையிலும் தேசிகருடைய தனியன் ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய ச்லோகமேயென்கிற விஷயம் ஓலை யேடுகளிலும் அச்சுப் பிரதிகளிலும் கண்ணாடிபோல் தேறியிருப்பதாலும், ராமாநுஜ தயாபாத்ரத்தைச் சொல்லத் தொடங்கின இடங்களிலெல்லாம் தேசிகருடைய அவதாரஸ்தலமுள்பட அதற்குத் தடையுத்தரவுகளும், அதை மீறிச் சொன்னவர்களுக்கு தண்டனைகளும் மர்யாதாலோபங்களும் ஏற்பட்டிருப்பது அசைக்கவொண்ணாதபடி தேறியிருப்பதாலும் ராமா நுஜபாத்ரத் தனியன் கோர்வில் சண்டைக்காகவே நூதனமாகக் கல்பித மென்பது கல்வெட்டு" என்று ஒருவர் சொன்னால் இதை ஈஷத்தாவது மறுக்கமுடியுமா? முடியுமானால் கம்பீரமாக முன்வருக.

**— வேறு விதமாக உண்மையிருக்க வழியில்லை —**

92. "ஸகல ஆழ்வார்களுடையவும் ஸகல ஆசாரியர்களுடையவும் திருவவதாரஸ்தலங்கள் அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் ஒரே சீராகத் தென்னாசார்ய ஸம்பிரதாயமாகவே நடந்து வருவதாலும் இந்த ஸ்தலங்களில் ராமாநுஜபாத்ரத் தனியன் ஒரு நாளும் தலைகாட்டப் பெறாதபடியாலும் கதாசித் குத்ரசித் தலைகாட்ட ஆரம்பித்தால் அப் போதே ஹாஹாகாரமுண்டாகித் தடைபட்டொழிகிறபடியாலும் இத்தனி யன் நவீனமாகக் கல்பிதமென்பது கல்வெட்டு" என்றுதான் சொல்லியாக வேண்டும். ஆழ்வார்களின் மங்களாசாசனம் பெற்ற ஸகல திவ்ய தேசங் களும் [அதாவது, ஸமீபகாலங்களில் நவீனர்களால் ஆக்ரமிக்கப்பட்டவை களாக நியாயாலயரிகார்டுகள் முதலியவற்றால் நன்றாகத் தெரியவருகிற திருவுள்ளூர் முதலான ஏழெட்டு திவ்ய தேசங்கள் தவிர மற்றுள்ள ஸகல திவ்ய தேசங்களும்] அநாதிகாலமாக நிர்விவாதகந்தமாய்த் தென்னாசார்ய ஸம்பிரதாயமாகவே வந்துகொண்டிருப்பதால் இவற்றில் ஸ்ரீசைலேசத் தனியன் தவிர வேறொரு தனியன் தலைகாட்டாதபடியாலும் ஸ்ரீசைலேசத் தனியனே முற்பட்டது; வேறுவிதமாக உண்மையிருக்க வழியில்லை.

**— ஸ்ரீபரகாலமடத்தவர்கள் எழுதியிருப்பது காண்மின் —**

93. ராமாநுஜபாத்ரத் தனியன் போட்டியாக நவீனமாகக் கற்பிக் கப்பட்டதே. தேசிகருக்குப் பரமகம்பீரமான ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய

தனியன் விளங்கிக் கொண்டிருக்க ராமானுஜா பாத்ரமென்கிற தனியன் எதற்காகத் தோன்றியது? என்கிற கேள்விக்கு நவீனர்கள் எழுதியிருப்ப தெல்லாம் அத்தனியன் நவீந கல்பிதமே யென்பதை நன்றாக ஸ்தாபித் துத் தருகிறது. " கவிதார்க்கிக கேஸரீ " என்கிற விசேஷணம் ஸ்ரீவைஷ்ண வாசார்ய கோஷ்டிக்குத் தகாததென்றும் (அதாவது) பகவத் விஷய க்ரந்தத்தைக் கொண்டு பகவத் குணாநுபவம் பண்ணுகிற காலத்தில் கவிதார்க்கிக கேஸரி யென்று ஆசாரியரை வருணிப்பது ஸ்வரூபவிருத்த மென்றும் அதனால் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய தனியன் வேண்டா மென்று ஒதுக்கப்பட்டு ராமாநுஜபாத்ரத் தனியன் செய்விக்கப்பட்ட தென்றும், இதை தேசிகரே உகந்தாரென்றும் பரகாலமடத்தவர்கள் எழுதிவைத்திருக்கிறார்கள். இது பொய்யுரையன்று; ஸத்யம் ஸத்யம்.

### — பரகாலமடத்தின் லேகநம் அஸங்கதமென்று நிரூபித்தல் —

94. தேசிகர் பகவத் விஷய ப்ரவசநம் செய்ய ஆரம்பித்தது எத்தனையாவது வயதில்? ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனைச் சொல்லி பகவத் விஷய காலக்ஷேபம் செய்த தேசிக சிஷ்யர்கள் எத்தனை பேர்கள்? அப்படி எத்தனை வருஷகாலம் நடந்துவந்தது? என்கிற கேள்விகளைக் கேட்டால் கோபதாபமில்லாமல் பதில் சொல்லவேண்டும். தேசிக ருடைய எழுபதாவது வயதில் ராமாநுஜாபாத்ரத் தனியன் தோன்றின தாக எழுதிவைத்தாய்விட்டது. " த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரக பாஷ்ய: " என்று ஸங்கல்ப ஸூர்யோதய நாடகத்தில் தேசிகர் தாமே சொல்லிக் கொண்டபடி அந்த வயதுக்குள் முப்பது தடவை அவர் ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் செய்திருப்பதாகத் தேறுகிறது. பகவத் விஷய ப்ரவசனமும் அத்தனை தடவை செய்திருக்க ஔசித்ய முள்ளது. அத்தனை தடவை களிலும் கவிதார்க்கிக கேஸரியுள்ள தனியனைச் சொல்லியே பகவத் விஷய காலக்ஷேபம் நடந்ததென்பதை அபலபிக்கவோ மறுக்கவோ முடியாமலிருக்க, அப்படி நீண்ட காலம் ஆதரிக்கப்பட்டு வந்த ஸ்ரீமான் வேங்கட தனியனை பகவத்விஷயக்ரந்தகாலக்ஷேபத்திற்குத் தகாத தென்று தள்ளிவிட்டு ராமாநுஜாபாத்ரத் தனியனை ஒருவர் ஸ்ருஷ்டித்தா ரென்று எழுதிவைத்திருப்பதும் சொல்லிக்கொண்டிருப்பதும் தகாது.

### — ருஜுவான வழியில் பதில் சொல்ல விஷயமேது —

95. இந்த பாத்ரத் தனியன் தேசிகனுடைய காலத்தில் தோன்றி யிருக்க ஒரு விதமான உபபத்தியும் இல்லை. உருட்டல் மெரட்டல் செய்து காலத்தைக் கழிக்கலாமே யொழிய ருஜுவான வழியில் பதில் சொல்ல என்ன விஷயமிருக்கிறது. முக்கியமாக ஒரு விஷயம். பாத்ரத் தனிய னுக்கு அடுத்தபடியாகச் சொல்லிவருகிற 'லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்' 'யோநித்ய மச்யுத' 'மாதாபிதா யுவதய:' 'பூதம்ஸரச்ச மஹதாஹ்வய' என்கிற இந்த நான்கு தனியன்கள் தென்னாசார்யர்களால் திவ்ய ப்ரபந்த ஸேவாகாலங்களில் மாத்திரமல்லாமல் ரஹஸ்யக்ரந்த பரம்பரையிலும்

உபயவேதாந்த பரம்பரையிலுங்கூட அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. நவீனர்களுக்கு எந்த பரம்பரையிலும் இந்த ச்லோகங்கள் கிடையவே கிடையாது. இவற்றுக்குப் பிரதியாக வேறு ச்லோகங்களையே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க திவ்ய ப்ரபந்த ஸேவைகளில் மாத்திரம் இந்த ச்லோகங்களை இவர்கள் சொல்லிவருவதானது 'நமக்கு அவிருத்தமானதுகளை மாற்றவேண்டாம். ஆரம்பத்திலேயே அதிகமான வித்யாஸம் காட்டவேண்டாம்' என்கிற எண்ணத்தினலாகையாலே இவர்கள் திவ்ய ப்ரபந்த ஸேவைக்கு வந்தேறிகளென்பது நிச்சிதம். முன்னே பிடித்தே *யோநித்ய மச்யுத* மாதா பிதா* தனியன்களை இவர்கள் அநுஸந்தித்து வருபவர்களாயிருந்தால் ஸமாச்ரயணாதி பரம்பரைகளில் அந்தத் தனியன்களை விட்டிருக்கமாட்டார்கள். அந்த தனியன்களை விட்டுத் தொலைத்தவர்கள் கோவில் சண்டைக்காகத்தானே பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

### — நவீனர்களின் கள்வத்திற்கு நற்சாக்ஷி —

96. வாழி திருநாமம் ஸேவிக்கும்போது ஸ்ரீசைலேசத் தனியனுக்கு முன்னே மணவாள மாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் தனியனை "நமஃ ஸ்ரீசைலநாதாய" என்கிற தனியன் எங்கும் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. இதைப் பார்த்து இவர்களும் ராமாநுஜபாத்ரத்துக்கு முன்னே தேசிகரின் ஆசார்யரான அப்பிள்ளாருடைய தனியனாக 'நமோ ராமாநுஜார்யாய' என்கிற ச்லோகத்தைச் சொல்ல ஆரம்பித்தார்கள். இந்த ச்லோகம் யார் செய்தது? எப்போது செய்தது? எதற்காகச் செய்தது? என்று கேட்டால் பதில் சொல்ல முடியவில்லை. என்ன சொல்ல முடியும். தேசிகர் ஸ்வாசார்யருக்குத் தனியனாக ஸாதித்த ச்லோகம் '**யஸ்மா தஸ்மாபி:**' என்கிற ச்லோகமேயென்பதும், அந்தத் தனியன்தான் எந்த காலக்ஷேபத்திலும் அநுஸந்திக்கப்பட்டு வருகிறதென்பதும் அபலபிக்கமுடியாத விஷயம். அப்படிப்பட்ட பரம கம்பீரமான தனியனை விட்டுவிட்டு 'நமோ ராமாநுஜார்யாய' என்கிறவொரு ச்லோகத்தைக் கல்பித்ததானது* நமஃ ஸ்ரீசைலநாதாயவென்னும் தனியனுக்குப் போட்டியாகவே யல்லவா? இதை ஒவ்வொருவரும் எளிதாக க்ரஹிக்கக் கூடுமல்லவா? ராமாநுஜாபாத்ர ச்லோக ஸ்ருஷ்டிக்குக் காரணமெழுதினது போல் இந்த ச்லோக ஸ்ருஷ்டிக்கும் ஒரு காரணமெழுதி வைக்கவேண்டாமா? எழுதி வைக்கவில்லையே. இதைக்கொண்டும் இவர்கள் போட்டிச் சண்டைக்கு வந்தவர்களென்பது கல்வெட்டாகத் தேறுகிறதல்லவா? நமது நிரூபணங்களில் இது தலையானது. ப்ராமாணிகர்கள் வாயைத் திறக்க முடியாது.

### — இந்த ஒரு பாராவை கவனித்தால் போதுமே —

97. 'ஸர்வதேச தசாகாலேஷ்வ' என்று தொடங்கி * 'ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய' என்னுமளவும் சொல்லி

வருகிற மூன்று ச்லோகங்களைத் தென்கலையார்கள் தாம் சொல்ல உரிமையுண்டு; வடகலையார்கள் இந்த ச்லோகங்களை நெஞ்சால் நினைக்கவும் லஜ்ஜிக்கவேண்டுமென்பது பிஷ்டபேஷணமானாலும் மிக முக்கியமான விஷயம். இதைப்பற்றி இவர்கள் வாயைக் கையைத் திறக்கமுடியுமா? சக்தியிருந்தால் கூசல் போடலாம், வாயார வையலாம்; விஷயத்தில் வாய் திறந்து பேச முடியுமோ? மனதுக்கு ருஜுவான உண்மை தெரிந்தால், பிராமாணிகனாயிருந்தால் தவறான விஷயங்களை விட்டுத் தொலைக்க வேண்டாமா? "செட்டி சுட்டது, கைவிட்டது" என்று தன்னடையே விட்டு நீங்கவேண்டாமா? இவ்வளவையும் நெஞ்சார அறிந்து வைத்தும் இன்னமும் வீண் சண்டைகளையே வளரவிடுவது நியாயமாகுமோ? நல்ல மதத்தில் பிறந்து ஈச்வரன் கொடுத்திருக்கிற விவேக சக்தியைக் கொண்டிருந்தும் உடலுமுயிருமுள்ளளவளவும் மனச் சாட்சியை மீறியே நடந்து கொண்டு போவதென்பது அருவருக்கத்தக்க விஷயமல்லவா? இட்டுக் கொள்ளுகிற நாமமும் கட்டிக் கொள்ளுகிற வேஷ்டியும் காசுக்கு முதவாத படி வீண் பிடிவாதமும் துராக்ரஹமுமே கொண்டு காலத்தைக் கழிப்பது சரியோ? ஸ்ரீரங்கம் ஸன்னிதியில் இந்த நவீனர்களுக்கு ராமானுஜர் ஒரு சிறு வேலைகூட கொடுக்கவில்லை. இது அன்று முதல் இன்றுவரையில் கல்வெட்டாயிருக்கிற விஷயம். அப்படியிருக்க, இவர்கள் "ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய" என்றும் "ராமானுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்" என்றும் கத்துவது ஏதுக்கு? இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ? "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ" என்பதை விட்டுத் தொலைத்தது போலவே இவைகளையும் விட்டுத் தொலைக்காதே பற்றிக்கொண்டு மன்றாடுவது வம்புக்கும் வீம்புக்கும் மாரடிக்கிற கதையல்லவா? இவர்கள் பிரபந்த கோஷ்டியில் நாமும் சம்பந்தம் பெற வேணுமென்று ஆசைகொண்டு ஓயாமல் வேலைசெய்து வருகிறபடியால் இதற்கு எப்படியாவது பெலம் கட்டவேணுமென்பதொன்றிலேயே இவர்களது நோக்கம். ராமானுஜாபாத்ரம் பிற்பட்ட காலத்தில் போட்டிச் சண்டைக்காகக் கற்பிக்கப்பட்டதென்பது உண்மையாயிருந்தாலும் அதை ஒப்புக்கொள்ளவே கூடாதென்கிற பிடிவாதம் விவேகிகளுக்கு உற்றதோ? மனச்சாட்சியை மீறாமல் உள்ளது உள்ளபடியேசொல்லி உண்மையை விளக்குவதன்றோ விவேகிக்ருத்யம். கடகாலில்லாமல் மேலே மேலே கட்டடங்கள் கட்டிக்கொண்டு போனால் என்னாகுமென்பது தெரியாததல்லவே. "எல்லாமறிவீர் ஈதேயறியீர்."

**— நவீனர்கள் வழிதப்பி யெழுதினார்களென்பது —**

98. ஸ்ரீமான் வேங்கட தனியன் பரமகம்பீரமானது இருக்கும்போது இந்த ராமானுஜா பாத்ரத்தனியனை ஏதுக்கு ஸ்ருஷ்டித்தார்களென்பதைப்பற்றியே ஒவ்வொருவரும் ஆராயவேணும். ஆராய்ந்தால், இது வீண் வம்புச்சண்டைக்காகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று தேறாமற் போகுமா? தேசிகர் காலத்திலேயே இந்த பாத்ரத்தனியனும் தோன்றி

யிருந்ததே என்று ஸ்தாபிக்க வேண்டுமானல் அதற்கு இவர்கள் எப்படி எழுதி வைத்திருக்க வேணுமென்றல், ஸ்ரீமான் வேங்கட தனியனும் பாத்ரத்தனியனும் ஏககாலத்திலேயே அவதரித்ததென்றும், ஒரு தனியனே ஸ்ரீபாஷ்யாதி காலக்ஷேபத்திற்கு வைத்துக் கொண்டு மற்றொரு தனியனைத் தமிழ்நூல்களுக்கு வைத்துக் கொண்டார்களென்றும் எழுதி வைத்திருக்க வேண்டும். அப்படி எழுதியிருந்தால் ஒருவாறு உய்யலாம்.

## — பெரிய அசட்டுத் தனத்தைப் பார்த்திலரந்தோ! —

99. பாத்ரத்தனியனை புராதனமென்று ஸ்தாபிப்பதற்காக பல குறுக்கு வழிகளில் நுழைய நேரிட்டது. நயினராசாரியர் தேசிகரிடத்தில் பகவத்விஷய காலக்ஷேபம் செய்தபோது பிரம்மதந்திரஸ்வதந்த்ரஜீயரும் கூடவே அந்த காலக்ஷேபம் செய்ய வேண்டியிருக்க, செய்யாமல் விலகி விட்டாரென்றும், ஏன் விலகினீரென்று தேசிகர் கேட்க, திருக்குமார ரிடத்தில் இது காலக்ஷேபம் செய்ய எனக்கு ஆசை என்று அவர் சொன்னதாகவும், அதை தேசிகர் உகந்தருளினதாகவும், பிறகு அப்படியே குமாரரிடத்தில் அந்த ஸ்வதந்திர ஜீயர் பகவத்விஷய காலக்ஷேபம் செய்ய ஆரம்பித்ததாகவும், அப்போது அவர் தேசிகர் விஷயமாக இந்த பாத்ரத்தனியனைச் செய்ததாகவும், இதை தேசிகர் முதலான யாவரும் திருச்செவி சாத்தி 'இந்த தனியன்தான் பரமஸாத்விகமாயிருக்கிறது; ஸ்ரீமாந் வேங்கட தனியன் கவிதார்க்கிககேஸரியென்று கர்ணகடோர மான பிருது சேர்ந்திருப்பதால் அது பகவத்விஷய காலக்ஷேபத்திற்கு வேண்டாம்; இதையே வைத்துக் கொள்ளுங்கள்' என்று கட்டளையிட்ட தாகவும்...............இப்படியெல்லாம் எழுதி வைத்திருக்கிறார்கள். ஸ்ரீமான் வேங்கட தனியனை தூஷித்து அசடான பாத்ரத்தனியனுக்கு ஓர் ஏற்றம் எழுதிவைப்பது எவ்வளவு அசட்டுத்தனம் என்பதை ஆலோசித்திலர்.

## — மிக முக்கியமான் விஷயம் இதுவே காணீர் —

100. ராமாநுஜாபாத்ரத் தனியனைப்பார்த்துத்தான் அதே நடையாக ஸ்ரீசைலேசபாத்ரத் தனியன் தொடுக்கப்பட்டதென்று சொல்லி விட்டாலென்ன? தேசிகன் ஸ்வாசார்யரான ராமாநுசப்புள்ளானுடைய தயைக்குப் பாத்ரபூதரென்று தெரிவிக்கிற முதல் பாதமாகிய (ராமநுஜ தயாபாத்ரம்) என்பதைப் பார்த்து மணவாளமாமுனிகளின் தனியனிலும் அவர் ஸ்வாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையினுடைய தயைக்குப் பாத்ர பூதரென்று தெரிவிக்கிற முதல்பாதம் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. தேசிகனை ஜ்ஞாந வைராக்கிய பூஷணரென்று சொன்னதைப் பார்த்து மணவாளமா முனிகளை தீபக்த்யாதி குணார்ணவராகச் சொல்லிற்று. தேசிகனுக்கு ஸ்ரீமத் வேங்கடநாதார்யரென்று மற்றொரு திருநாம மிருப்பதாகச் சொல்லியிருப்பதைப் பார்த்து மணவாளமா முனிகளுக்கும் யதீந்த்ரப்ரவணரென்று ஒரு திருநாமமிருப்பதாகச் சொல்லி வைத்திருக்கிறது. வந்தே வேதாந்த தேசிகம் என்றதைப்பார்த்து (வந்தே ரம்யஜாமாதரம் முநிம்) என்றது. ஆகவே ராமாநுஜ பாத்ரந்தான் முன்னே யிருந்தது, அதைப்

பார்த்தே ஸ்ரீசைலேச பாத்ரம் அதே மாதிரியாய்த் தொடுக்கப்பட்டது: என்று சொன்னால் என்ன பாதகம் என்றுரொருவர். அவர்க்கு நாம் தெரிவித்ததாவது தேசிகனுடைய தனியனும் மணவாளமா முனிகளுடைய தனியனும் இருக்கட்டும். இவ்விருவர்க்கும் ஆசார்யர்களான கிடாம்பியப் புள்ளாருடையவும் திருவாயமொழிப் பிள்ளையினுடையவும் தனியன்கள் சொல்லப்படுகின்ற தன்றோ ; அதையெடுத்துக் கொண்டல்லவோ சாயம் அலசப்படுகிறது. இதை யன்றோ கவனிக்கவேணும். மணவாளமாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை தேசிகனுடைய ஸமகாலத்திலிருந்தவர். பிற்காலத்தவராக இருந்தாலுமிருக்கட்டும். அவருடையதனியன் "நம: ஸ்ரீசைலநாதாய குந்தீ நகர ஜந்மநே, ப்ரஸாதலப்த பரமப்ராப்ய கைங்கர்ய சாலிநே" என்பது ; வேறு தனியன் அவர்க்குக் கிடையாது. ஸமாச்ரயண பரம்பரையோ, க்ரந்த பரம்பரையோ, ஸந்நிதிகளில் ஸேவா கால பரம்பரையோ எல்லாவற்றிலும்' நம: ஸ்ரீசைல நாதாய தனியனையே தென்னசாரியர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வேறு கிடையாது. இந்தத்தனியனுடைய ஸ்தானத்தில் நவீனர்கள் அநுஸந்திக்கிற தனியன் 'நமோ ராமாநுஜார்யாய வேதாந்தார்த்த ப்ரதாயிநே, ஆத்ரேய பத்மநாபார்ய ஸுதாய குணசாலிநே' என்பது. இது அப்புள்ளார் காலத்திலேயே அவதரித்ததாக இருக்கவேண்டுமல்லவா ? என்று கேட்டால் ஆமாம், அப்படித் தானிருக்கவேண்டும் ; ஜீவதசையில் சிஷ்ய ஸம்பத்தோடு விளங்கின அப்புள்ளாருக்கு அக்காலத்தில் தனியன் அவதரியாமல் பிற்காலத்தில் ஏதுக்கவதரிக்கும். இந்த 'நமோ ராமாநுஜார்யாய தனியன் அப்போதே அவதரிக்கவில்லையா என்ன ? அப்புள்ளாருக்கு இது தானே தனியன் ? என்று சிலர் மயங்கிப் பேசுவார்கள்.

## — விவேகமுள்ளவர்கள் இதை ஆலோசிக்க வேண்டாமா ?

101. இந்த நமோ ராமாநுஜார்யாய தனியன் அப்புள்ளாருடைய காலத்திலேயே தோன்றினதென்று தேறி விட்டால் இதைப் பார்த்தே திருவாய்மொழிப் பிள்ளையின் தனியனை' நம: ஸ்ரீசைல நாதாயச்லோகம் காப்பியடிக்கப்பட்டதென்று திண்ணமாகச் சொல்லி, இதே நியாயத்தால் தென்கலையார்களே எல்லாமும் காப்பியடித்தவர்களென்று ஊர்ஜிதமாக வாதிக்க இடமுண்டாகும். ஐயோ, அதற்கு வழியில்லையே கிடாம்பியப் புள்ளாரென்பவர் தேசிகனுக்கு ஆசார்யரல்லவா ? அவருக்குத் தனியன் ஸாதித்தவர் தேசிகனல்லவா ? தேசிகன் ஸாதித்த தனியன் ஸமாச்ரயண பரம்பரையிலும் க்ரந்த காலக்ஷேப பரம்பரைகளிலும் அவிச்சின்னமாக அநுஸந்திக்கப்படுவது "யஸ்மாதஸ்மாபிரேதத் யதிபதிகதித ப்ராக்தந ப்ரக்ரியோத்யத் கர்மப்ரஹ்மாவமர்சப்ரபவபஹுபலம் ஸார்த்தமக்ராஹி சாஸ்த்ரம், தம் விஷ்வக் பேத வித்யா ஸ்திதிபதவிஷயம் ஸ்தேயபூதம் ப்ரபூதம் வந்தே யாத்ரேய ராமாநுஜ குருமநகம் வாதிஹம்ஸாம் புவாஹம்." என்பதன்றோ ? இதுதானே அப்புள்ளாருக்கு அஸலான தனியன். ச்லோகம் எப்படி யிருக்கிறது? இவ்வளவு கம்பீரமான ச்லோகத்தைத் தள்ளி விட்டு வேறொரு அநுஷ்டுப்பை யார் செய்தது? எப்போது செய்தது ? எதற்காகச் செய்தது ? என்பதை அறிவுள்ளவர்கள் ஆலோசிக்க வேண்டாமா ?

## — அப்புள்ளாருடைய தனியனால் மருமம் வெளியாவது —

102. அப்புள்ளாருடைய தனியன் * யஸ்மாதஸ்மாபி:* என்பதே பிராமாணிகமானது. அதுதான் நாளைக்கும் கோவில் சண்டை தவிர மற்ற விடங்களில் அநுஸந்திக்கப்பட்டுவருகிறது. அதை விட்டு விட்டு * நமோ ராமாநுஜார்யாய * என்கிற ச்லோகத்தைப் புதிதாக ஸ்ருஷ்டித்தது, * நம: ஸ்ரீசைலநாதாய * என்று தென்கலையார் சொல்லி வருகிற தனியனுக்குப் போட்டியாய் அதே அளவாக இருக்கவேணு மென்பதற்காகவே. ஸ்ரீமான் வேங்கட தனியனில் *கவிதார்க்கிக கேஸரீ * என்றிருப்பது பகவத்விஷய காலக்ஷேப கோஷ்டிக்குப் பொருத்தமாக இல்லையென்று அந்தத் தனியனைத் தள்ளி ராமாநுஜதயா பாத்ரத்தனியன் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று எழுதிவைத்த நவீனர்கள் இதற்கும் ஒரு காரணாபாஸம் எழுதிவைத்திருக்கவேணடாமா ? என்ன எழுதியிருக்கிறார்கள் ? என்ன எழுதமுடியும்? 'தேசிகன் ஸாதித்த அப்புள்ளர் தனியனில் ப்ரஸூதம் என்கிற அச்லீல பதம் காண்பதால் அதையும் விட்டு வேறு அநுஷ்டுப்பு எழுதவேண்டியதாயிற்றென்று மதுராந்தகம் பண்டிதரொருவர் சொன்னார். இப்படி முந்தின தனியன்களுக்குக் குறை கூறுவதே இவர்கள் பணியாயிற்று. இவ்விஷயத்தில் இவர்களுடைய கள்வம் வெட்ட வெளிச்சமாக வில்லையா ? ஒவ்வொரு ஆசாரியர்க்கும் கிரமமாகவுள்ள தனியன் வேறு தானென்றும், புதியதாய் போட்டிச் சண்டைக்காகக் கல்பனை செய்யப்பட்ட தனியன் வேறுதானென்றும் ஸ்பஷ்டமாக விளங்கவில்லையா ? ஆக, தேசிகனுடைய ஸ்ரீமான்வேங்கடதனியனைவிட்டு ராமாநுஜாபாத்ரத் தனியனைக் கல்பனைசெய்தது போட்டிச் சண்டைக்கே யென்பது தேறிற்று.

## — நவீனர்களின் பலவகை மாறாட்டங்கள் —

103. நம்மாழ்வாருக்குத் தனியனாக * மாதா பிதா யுவதய:* என்று ஆளவந்தாரருளிச் செய்த ச்லோகம் ஏற்பட்டிருக்கிறது. ஆளவந்தாரிடத்தில் யாருமபகை பாராட்டக் காரணமில்லை. அவரருளிச்செய்த நம்மாழ்வார்தனியனை உலகமெல்லாம் சொல்லிக்கொண்டிருக்க, நவீனர்கள் மட்டும் அதை விட்டு * யஸ்ய ஸாரஸ்வதஸ்ரோத:* என்கிற தனியனைச் சொல்லி வருகிறார்கள் ; இதைப்பற்றி நாம் இப்போது ஒன்றும் ஆக்ஷேபம் சொல்ல வரவில்லை. தேசிகனுடைய ஸ்ரீ ஸூக்தியான தனியன் நமக்கு இருக்கும்போது வேறொருவர் ஸாதித்த தனியனை [* மாதாபிதா வென்பதை] நாம் ஏதுக்குச் சொல்லவேணுமென்று அபிப்ராயப்பட்டு அதை விட்டது சரியென்றே கொள்ளுவோம். முக்கியமான ஸமாச்ரயண பரம்பரைகளிலும் க்ரந்த பரம்பரைகளிலும் * மாதாபிதா தனியனை விட்டவர்கள் பிரபந்தம் தொடங்குகிறபோது மட்டும் அதைக் கைப்பற்றி வருகிறார்களே, இது என்ன ? இதன் மருமமென்ன ? என்று ஆலோசிக்க வேண்டாமா ? இது மட்டுமன்று. பாஷ்யகாரருடைய தனியனிலும் இதுவே கதிதான். * யோநித்யமச்யுத * என்கிற ச்லோகம் பாஷ்யகாரருக்குத் தனியனாகக் கூரத்தாழ்வான் ஸாதித்தது. இதையே உலகமெல்லாம் அவர்க்குத் தனியனாகச் சொல்லி வருகிறது. திருக்குடந்தை தேசிகனிடம் வந்தபோது அதையும் விட்டு (ப்ரணமம் லக்ஷ்மணமுநி:) என்கிற யதிராஜஸப்ததி

ச்லோகத்தைப் பற்றிக்கொண்டார்கள். ஸகல பரம்பரைகளிலும் இந்தத் தனியனையே பாஷ்யகாரருக்கு வைத்துக்கொண்டிருக்குமவர்கள் பிரபந்தம் தொடங்கும்போது மட்டும் (யோநித்யமச்யுத) என்கிற ச்லோகத்தைக் கத்துகிறார்களென்றால் விவேகியான வொருவன் இதை விமர்சிக்கவேண்டாமா? தனியன்கள் விஷயத்தில் தென்கலையார்கள் எப்போதும் ஒரு சீராகவே யிருந்து வருகிறார்களென்பதையும், நவீனர்கள் ஒவ்வொன்றிலும் எவ்வளவோ விபரீதங்கள் கொண்டிருக்கிறார்களென்பதையும் நடுநிலையில் நிற்பவர்கள் கவனிக்க வேண்டாமா?

— மடத்தார்களின் பலவகை மாறுபாடுகள் —

104. மடத்தார் சொல்லி வருகிற தனியன்கள் எப்படி? அதுவாவது ஒரு சீராக இருக்கிறதா? என்று பார்ப்போம். மடத்தார் அச்சுபோட்டிருக்கிற தனியன் புத்தகங்களையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் அதிலும் அளவுகடந்த சூதுகள் காணலாம். அறுபது வருஷங்களுக்கு முன்பு அச்சிட்ட இந்த மடத்துப் பரம்பரைத் தனியன் புத்தகத்தில் பெரிய பெருமாள் பெரிய பிராட்டியார், ஸேநாபதி, நம்மாழ்வார் முதலாக ஒவ்வொரு ஆசாரியர்க்கும் தென்கலையார் சொல்லிவருகிற தனியன்களையே அச்சிட்டிருக்கிறார்கள். மடம் தென்கலையாயிருந்த காலத்தில் அச்சிட்ட அதை இப்போது காட்டி என்ன லாபம்? என்பர்கள். மடம் வடகலையாக மாறின பிறகு அச்சிட்டதேயொழிய தென்கலையாயிருந்த காலத்தில் அச்சிட்டதன்று. அக்காலத்தில் அச்சுக்கூடமே யேற்படவில்லை. மடத்துக்கு வடகலைக்கறுக்கு முற்றாத காலத்தில் அச்சிட்டதாகையால் புராதன பத்ததியாக வந்த தனியன்களை மாற்றிவிடலாகாது என்கிற ஸாத்விகமான எண்ணம் அப்போதிருந்தது. அதனால் தனியன்கள் மாற்றப்படவில்லை. அதன் பிறகு 25 வருடம் கழித்து அச்சிட்ட புத்தகத்திலுள்ள வேடிக்கையைக் காணவேணும். இந்த புத்தகத்தில் நடுவே ஒரு கோடுபோட்டு இரண்டு பத்தியாக்கி ஒரு பத்தியில் (ஸ்ரீ ஸ்தநாபரணமித்யாதி, பழைய தனியன்களையும், மற்றொரு பத்தியில் (கமப்யாத்யம் குரும் வந்தே இத்யாதி) புதிய தனியன்களையும் போட்டிருப்பதைப் பார்க்கவேணும். இப்படி போட்டால் என்ன அர்த்தம். எதற்காக இப்படி போடுகிறது? எது இஷ்டமோ அதைக் கொள்கவென்று அர்த்தமா? அதற்கும் பிறகு அச்சிட்டிருக்கிற தனியன் புத்தகத்தைப் பார்த்தாலோ, முதலில் காட்டின பதிப்பிலுள்ளதனியன் பத்ததியும் இல்லை; இரண்டாவதாகக் காட்டிய புத்தகத்தில் கோடிட்டு இரண்டு பத்தியில் இரண்டு வகைத் தனியன்கள் போட்டிருந்ததே அதுவும் மாறிவிட்டது. இதில், புது வைஷ்ணவம் கொண்டாடின விதம் பரிஷ்காரமாய்க் காட்டப்பட்டுவிட்டது. "பரம்பரைத் தனியன் என்கிற கௌரவம் வேண்டாமா? மனம் போனபடி நித்யமும் தனியன்களை மாற்றிக்கொண்டேயிருப்பது மடத்திற்கு அழகா? சிஷ்யவர்க்கம் எல்லாம் மடமாகவே யிருக்குமா? சில பேர்களாவது விவேகிகள் இருக்கமாட்டார்களா? அவர்கள் என்ன நினைக்கமாட்டார்கள்?" என்று கேட்டால், இப்படிப்பட்ட கேள்விகளுக்கு 'சேஷம் கோபேந பூரயேத்' என்பது தவிர வேறு பதில் ஏது? மடத்தார் (கேசவார்ய க்ருபாபாத்ரம்) என்கிறார்களே, அதைப்பற்றியும் கேண்மின்.

— மடத்துஸ்வாமி தனியனுடைய செய்தியையும் விளக்குவோம் —

105. கிடாம்பியப்புள்ளாருக்கு க்ரமமான தனியன் பரமகம்பீரமாக இருக்க, அது எப்படி மாற்றப்பட்டதோ, தேசிகனுக்கும் பரம கம்பீரமான ஸ்ரீமான் வேங்கடதனியனிருக்க அது எப்படி மாற்றப்பட்டதோ அப்படியே ஆதிவண் சடகோபஸ்வாமிக்கும் வெகு கம்பீரமான தனியன் "ப்ரபத்யே நிரவத்யாநாம் நிஷத்யாம் குணஸம்பதாம், சரணம் பவபீதாநாம் சடகோப முநீச்வரம்." என்கிற ச்லோகமிருக்க அதைத் தள்ளி (தயாபாத்ரம்) என்கிற தனியன் சொன்னால்தான் பிரபந்தம் வாயில் நுழையும் என்று கிரஹித்துக்கொண்டு அபரிமிதமான தயாபாத்ர க்ருபா பாத்ர ஸ்ருஷ்டியன்றோ ஆய்விட்டது. ஆண்டவன் பரம்பரைத் தனியன் புத்தகங்களை யெடுத்துப்பார்த்தால் தயாபாத்ரம் நுழையாத தனியன் ஒன்றுகூட கிடையாது. பாபபீருக்களாய் ஸாதுக்களாயிருக்குமவர்கள் இத்தகைய விஷயங்களை நன்குஉணரப்பெற்றால் அருவருப்பு உண்டாகாமலிருக்குமா? இது என்ன கட்டுப்பாடோ!

— அவசியம் பதில் சொல்லியேயாகவேண்டிய கேள்விகள் —

106. "தேசிகனோடு ஸம்பந்தத்தைப் புதிதாக ஏறிட்டுக்கொண்ட போது நடந்த கூத்துக்கள் பல" என்றும், "புதுவைஷ்ணவம் கொண்டாட வந்தகாலத்தில்" என்றும் நாம் பலகால் எழுதியிருக்கிறோம். தேசிகனுடைய திருவவதார ஸ்தலத்தில் திவ்யப்பிரபந்த ஸேவையில் தென்கலை ஸம்பிரதாயமே அத்யாபி விளங்கி வருகிறதே, இதற்கு என்ன காரணம்? அங்கே தேசிகனுடைய திருமண்காப்பு நூதன காலத்தில்தான் மாற்றப்பட்டதென்று ஸர்க்கார் ரிகார்டுகள் ருஜுப்படுத்துகிறதே, தேவப்பெருமாள் ஸன்னிதியில் வாஹன மண்டபத்தில் தேசிகன் எள்ளியிருக்கச்சே திருப்புட்குழிஸ்வாமி வேகவதிக் கரையில் ஒரு தேசிகன் ஸன்னிதியை எதற்காகக் கட்டிவைத்தார்? கோவில் கட்டினதோடு நிற்காமல் அந்த தேசிகனுக்கு வீதிப்புறப்பாடு உத்ஸவாதிகளும் செய்வது ஏதுக்கு? இது எப்படியாவதிருக்கட்டும். அவதார ஸ்தலமான தூப்பிலில் தேசிகன் எள்ளியிருக்கும்போது வாசலில் தனியே ஒரு க்ருஹம் கட்டி அதில் ஒரு நூதந தேசிக விக்ரஹத்தை ஸ்தாபித்து அவருக்கு உத்ஸவாதிகள் நடத்துவது எதற்காக? இதர ஆழ்வாராசாரியர்களுக்கு இப்படி எங்கேயாவது நடக்கிறதா? இப்படிப்பட்ட அசட்டுக் காரியங்களைப் பார்க்கும்போது நவீனகாலத்தில்தான் இவர்கள் தேசிகனோடு உறவுகொண்டாட ஆரம்பித்தார்களென்பது ஊர்ஜிதமாகவில்லையா?

— இடையில் நானூறு வருஷகாலம் ஒன்றும் தெரியவில்லையே —

107. இவர்கள் பரம்பரையாக தேசிகனை வழிபடுகிறவர்களாக இருந்தால்--(அதாவது) தேசிகன் காலத்திலிருந்தே தேசிக திவ்ய ஸூக்திகளைக் கொண்டு காலக்ஷேபம் செய்து வருபவர்களாக இருந்தால், வியாக்கியானங்களை அவசியம் அபேக்ஷித்திருக்கின்ற ரஹஸ்யத்ரயஸாராதிகளான தேசிக ரஹஸ்யங்களுக்கும் தேசிக ப்ரபந்தங்களுக்கும் அக்காலத்திலேயே இவர்களது வகுப்பினர் வியாக்கியானங்கள் செய்திருக்க வேண்டுமே. அப்படி ஒன்றுகூட காணவில்லையே. தேசிகன் திருநாட்டுக்கெழுந்தருளின பிறகு (400 நானூறு வருஷம் வரையில் இவர்களின் சரித்திரம் ஒன்றுமே

தெரியவில்லையே. ரஹஸ்யத்ரயஸார வியாக்கியானமோ தேசிக ப்ரபந்த வியாக்கியானமோ ஸ்தோத்ர பாடவியாக்கியானமோ எதுவும் மிக நவீந காலத்தில் தோன்றியிருக்கிறதேயொழிய வேறில்லையே. இடையில் 400 வருஷகாலம் இவர்கள் எங்கேயிருந்தார்கள்? என்ன செய்துகொண்டிருந் தார்கள்? என்று ஒரு மத்யஸ்தர் கேட்டால் அதற்கு பிராமாணிகமாக பதில் சொல்லவேண்டாமா? நம்மைப்பற்றி இங்ஙனே கேட்க வழியில்லையே.

— மிகவும் முக்கியமான வார்த்தை யொன்றே —

108. சோளங்கிபுரம் தொட்டயாசார்யஸ்வாமி 350 வருஷங்களுக்கு மேற்பட்டவர். இவர் தென்னுசார்ய ஸம்பிரதாயஸ்தர். இவருடைய வம்ச பரம்பரை இன்றைக்கும் தென்கலையாகவே சோளங்கிபுரத்தில் விளங்கி வருகிறது. ஆக்கூர் என்கிற அக்ரஹாரத்தை ப்ரதிஷ்டை செய்தவர் இந்த மஹானே யாவர். அந்த அக்ரஹாரத்திய ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவரும் பரம்பரையாகத் தென்கலையாயிருந்து ஸமீபகாலத்தில்தான் (ஒரு திருமாளிகைக்காரர் தவிர மற்ற எல்லாரும்) வடகலையாக மாறிவிட்ட தாக ஒருவர் எழுதி யிருக்கிறுர். மாறினவர்களும் அத்யாபி தங்கள் க்ருஹங்களில் நேரும் விசேஷங்களில் அந்த தொட்டயாசார் ஸ்வாமிக்கே ஸம்பாவனை நடத்திவருவது நிர்விவாதம்; வடகலையாக மாறினவர்களும் தொட்டயாசார் தென்கலையே யென்பதை ஒப்புக்கொள்ளுகிறுர்கள். அந்த மஹான் ஸ்வப்நத்திலே தேசிகனை ஸாக்ஷாத்கரித்ததாகவும் வேதாந்தார்த்த உபதேசங்கள் பெற்றதாகவும், அதன்பிறகு சததூஷணிக்கு வியாக்கியான மாக சண்டமாருதம் ஸாதித்ததாகவும் சொல்லப்பட்டு வருகிறது. இப்படிப் பட்ட பெருமை வடகலை ஸம்பிரதாயத்தில் ஏதத்க்ஷணபர்யந்தம் ஒரு நபருக்கும் ஏற்பட்டதாகத் தெரியவில்லையே. அந்த தொட்டயாசார்ஸ்வாமி தேசிகனை ஸாக்ஷாத்கரித்தபோது தேசிகன் திருநெற்றியிலும் திருமேனி யிலும் வேருன திருமண் காப்புடன் ஸேவை ஸாதித்திருந்தால் அந்த தொட்டயாசார்ஸ்வாமி உடனே தம்முடைய திருமண் காப்பையும் அவ்வித மாக மாற்றிக் கொண்டிருக்கமாட்டாரா? அவர் மஹாப்ராமாணிகரே யொழிய அப்ராமாணிகரல்லரே. தேசிகனையே பரதெய்வமாகக்கொண்ட வர் அவர் என்பதிலும் ஸந்தேஹமில்லையே. அவருடைய ஸந்ததியார் நாளைக்கும் தென்கலைத் திருமண் காப்புடனே கூடிய தேசிக விக்ரஹாரா தனம் செய்து வருவது அபலபிக்க முடியாதது; அவர் தேசிகனை ஸாக்ஷாத் கரித்ததாகச் சொல்லப்படுகிற ஐதிஹ்யம் பொய் என்றுவது சொல்ல வேண்டும். அல்லது ஸாக்ஷாத்கரித்த தேசிக திருமேனியில் ஒரு திருமண் காப்புமில்லாமல் பௌத்த விக்ரஹம்போல் ஸேவை ஸாதித்ததாகவாவது சொல்லவேண்டும். யோக்யர்கள் இப்படிச் சொல்லமுடியாது.

109. தேசிக ஸூக்திகளுக்கு ந்ருஸிம்ஹ ராஜீயமென்கிற வியாக் கியானம் ப்ரஸித்தமாகச் சொல்லப்படுகிறதல்லவா? அந்த ந்ருஸிம்ஹ ராஜரும் தென்கலை ஸம்ப்ரதாயஸ்தரே; தொட்டயாசார்யருடைய தேஹஸம் பந்தியே அவர்; யாதவாப்யுதயத்திற்கு அப்பய தீக்ஷிதர் வியாக்கியானம் பண்ணிப்போனுர்; சததூஷணீ ந்யாய பரிசுத்தி முதலானவற்றுக்கு தொட்டயாசார்ய ந்ருஸிம்ஹ ராஜாதிகள் வியாக்கியானம் செய்து போனுர்கள். இக்காலத்தில் நவீனர்கள் நாங்களே தேசிக பக்தர்க ளென்று போராடி வருகிறுர்கள். திருக்குடந்தை தேசிக னென்கிற

கோபால தேசிகனுக்கு முன்னே ஒரு வடகலை வைஷ்ணவரையாவது எடுத்துக்காட்டி 'இவர் தேசிக ஸம்பிரதாயத்திற்கு இன்ன காரியம் செய்தார்' என்று நிரூபிக்க முடியுமா? உள்ளதைச் சொன்னால் சீறுவதற்கும் எரிந்து விழுவதற்கும் இவர்கள் ஸித்தமாயிருக்கிறார்களே தவிர, இப்படிப்பட்ட விஷயங்களில் ஒன்றுக்காவது கோபதாப மில்லாமல் நேர்நின்று பதில் சொல்ல சரக்குண்டோ? இப்போது வடகலை ஸம்பிரதாயத்தில் விளங்கும் நூல்கள் யாவும் ஒன்று தப்பாமல் மேலே சொன்ன திருக்குடந்தை கோபால தேசிகனுக்குப் பிற்பட்டவையே யொழிய அவருடைய காலத்திற்கு முற்பட்டதாக ஒரு ஏடு கூட காட்டமுடியாதென்பது ஸத்யம்.

110. இருந்தால் இதோ இன்னது இருக்கிறதென்று காட்ட தாராளமாக முன் வரலாமே. ஏதிக்குப்ரேதியாக பகவத் விஷயமென்று வைத்துக்கொண்டிருப்பதும் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார வியாக்கியானமென்று வைத்துக்கொண்டிருப்பதும் எல்லாம் அந்தகோபாலதேசிகன் காலத்திற்குப்பிற்பட்டவையே என்பதை ஒருவரும் மறுக்கமாட்டார். அவருடைய காலம் கி பி. 18, 19 நூற்றாண்டுகளிலேயே; அதிஸமீபகாலம். இவற்றுக்கு பதில்சொல்ல விஷயமேது? இருந்தால் அது உள்ளே நிற்குமா? வெளிவந்துதீருமே.

## — தூப்புல் என்கிற சொல் வடிவத்தின் ஆராய்ச்சி —

111. நிரூபண நிபுணர்களான பிராமாணிகர்களுக்கு ஒரு நுட்பமான விஷயம் தெரிவிக்கிறோம். இதை நிதியாகக் கொள்ள வேண்டும். **தூப்புல்** என்கிற சொல்லைக் கொண்டிருக்கிற வாக்குக்களையெல்லாம் நவீநகல்பிதங்களென்று திண்ணமாக எண்ணுங்கள். பர்யாப்தமான உபபத்திகளில்லாமல் எதையும் நாம் ஸஹஸா சொல்லி விடமாட்டோமாதலால் உபபத்திகளையுரைக்கக் கேளீர். தேசிகனுடைய திருவவாதாரஸ்தலம் விளக்கொளியெம்பெருமான் ஸந்நிதி பரிஸரம். அத்தலத்திற்குத் **தண்கா** என்பது ஸம்பிரதாயத் திருநாமம். திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியிலும் திருநெடுந்தாண்டகத்திலும் திருத்தண்காவென்றே பாடியுள்ளார். தேசிகன் இந்த வ்யபதேசத்தையே ஆதரித்து சரணாகதிதீபிகையென்கிற தீபப்ரகாச ஸ்தோத்ரத்தில் "**ஹிமோபவநேச!**" என்றும் "**சிசிரோபவநேச்வர**" என்றும் அருளிச் செய்துள்ளார். **தண்கா** என்றால் குளிர்ந்த சோலையென்று பொருள். இப்பொருளையே கொண்டவை மேலே குறித்த வடமொழி வாசகங்கள். இதை விட்டு வேறு வாசகத்தால் சொல்லுமிடத்து "வேகவதீஸமீபே" என்கிறார். ஆழ்வார்கள் காலத்திலும் ஆசாரியர்களின் காலத்திலும் அந்த ஸ்தலம் திருத்தண்காவென்று வழங்கப்பட்டு வந்ததேயொழிய வேறுபெயரால் வழங்கப்பட வில்லையென்பது மறுக்க முடியாத விஷயம்.

112. அப்பயதீக்ஷிதரவர்கள் அத்தலத்தில் குடிவாழ வந்துசேர்ந்து அங்கே ஒரு அக்ரஹாரப்ரதிஷ்டை செய்தார்களாம். அதுதான் தும்பைவனமென்று நாளைக்கும் வழங்கப்பட்டு வருவது. சிவபக்தியுள்ளவர்களுக்குத் தும்பையில் ஆதராதிசயமுள்ளதாதலால் அவர்கள் தும்பைவனமென்று பெயரிடுவது ஸஹஜமே. பார்த்தஸாரதியென்று பெயருள்ளவரைப் பாச்சுவென்றும், சேஷாத்திரி யென்று பெயருள்ள

வரை சேச்சு வென்றும், க்ருஷ்ணஸாமியைக் கிட்டு வென்றும்....இங்ஙனே குறுக்கிச் சொல்லுவது போல, தும்பைவனத்தைத் தூம்பில் என்றும் தூப்பில் என்றும் நாளடைவில் வழங்கிவர ஆரம்பித்தார்கள். அந்த வழக்க முண்டான பின்புதான் ஸ்ரீவைஷ்ணவர்களும் தூப்பிலென்றும் தூப்புலென்றும் கூறத்தலைப்பட்டார்கள். இதை நாம் பிராமாணிகர்களிடம் கேட்டு எழுதுகிறோமே யொழிய நாமாகவே கல்பித்து எழுதுவதன்று. நெடுநாள் வரையில் இத்தத்துவத்தை நாமுமறிந்திலோம்.

**— பழைய நூல்களில் ஒன்றிலாவது தூப்புலென்று காட்டமுடியுமா ? —**

113. இப்போது ஒவ்வொருவரும் ஆர அமர ஆராய்ந்து பார்க்கலாம். விவாதாஸ்பதங்களான வாங்மயங்களை விட்டிட்டு ஸர்வஸம்ப்ரதிபந்நங்களான வாக்குக்களிலே ஓரிடத்திலாவது தூப்புலென்னுஞ் சொல் காணக்கிடைக்கிறதா வென்று தேடிப்பாருங்கள். கதிராயிரமிரவி கலந்தெரித்தாலும் காணக்கிடைக்காதன்றோ. தேசிகனுடைய திவ்யஸூக்திகள் எத்தனையில்லை ? அவருடைய காலத்தில் தூப்புலென்கிற வ்யபதேசமிருந்தால் அதைப்ரயோகியாமலிருந்திருப்பரா ? தண்கா என்பதை ஹிமோபவநமென்றும் சிசிரவநமென்றும் மொழிபெயர்த்தருளினவவர் தூப்புலைத் தொட்டிருக்கிறாரா வென்று விமர்சிக்க வேண்டியது அவசியமல்லவா ? பிரபந்தசாரத்தை அவர் இயற்றியிருந்தால், பிள்ளையந்தாதியை அவர் திருக்குமாரர் இயற்றியிருந்தால் திருத்தண்காவென்கிற சொல்லை விட்டிட்டுத் தூப்புலென்கிற சொல்லைக் கொண்டிருக்க ப்ரஸக்தியே கிடையாது. "சந்தமிகு தமிழ்மறையோன் தண்காவந்த" "தண்கா வாழும்" என்றன்றோ ஸாதித்திருப்பர். இது மோனையின்பத்திற்கு மிணங்குமே.

114. தண்காவைவிட்டுத் தூப்பிலை எதற்காக நவீனர்கள் பற்றிக் கொண்டார்களென்பதைப்பற்றியும் தெளிவிக்கிறோம். தென்னாசார்யர்களில் சிறந்த ஆசிரியர்களை நம்பிள்ளையென்றும் வடக்குத் திருவீதிப் பிள்ளையென்றும் பெரியவாச்சான்பிள்ளை யென்றும் ஆச்சான்பிள்ளை யென்றும் திருவாய்மொழிப் பிள்ளையென்றும் இப்படி பிள்ளையென்றே வழங்கி வருகிறார்கள் ; அவரவர்களுக்குள்ள திருநாமத்தையிட்டு வழங்குவதில்லை. தேசிகனிடத்தில் புதிதாக பக்தி பாராட்டத் தொடங்கினவர்களுக்கு 'நாமும் நம் குருவைப் பிள்ளை யென்றே வழங்க வேணும்' என்றோராசையுண்டாயிற்று. தண்காப்பிள்ளை யென்றால் நன்றாயில்லை யென்று தோன்ற, தூப்புற்பிள்ளையென்றார்கள். அக்காலத்தில் பழநடை விளக்கமென்றும் தொன்னடைத்துலக்கமென்றும் சில வாத விவாத நூல்கள் விளைந்து அச்சேறியுமுள்ளன. அவற்றில் தூப்புல் பிள்ளை ப்ரயோகம் மிகவதிகம். கிம் பஹுநா ? தும்பைவனமென்கிற சொல்லே தான் தூப்புலாக மாறுபட்டது. அப்பயதீக்ஷிதருடைய காலத்திற்கு முன்பு தும்பைவனம் கிடையாது. தூப்புலும் கிடையாதென்பது கிம்புநர்ந்யாய ஸித்தம். விச்வாமித்ர மஹர்ஷியின் சரிதையில் * அந்யமிந்த்ரம் கரிஷ்யாமி கேட்டிருக்கிறோம். அவர் கரிஷ்யாமியோடு நிற்காமல் பலவற்றில் க்ருதவாநஸ்மியானார். அது எந்த யுகத்திலோ. "இங்கே

காண இப்பிறப்பே" என்றாழ்வாரருளிச் செய்தபடி ஸமீபகாலத்தில் நடந்த ஸ்ருஷ்டிகள் இவை.

## — நவீநர்களின் குருபரம்பரை யாராய்ச்சி —

115. நமது வார்த்தைகளை யாவரும் உறுதியாக நம்பும்படி ஒரே விஷயம் காட்டிமுடிக்கிறோம். இந்த ஸ்ருஷ்டிகள் ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் சரித்ரபுத்தகமுமொன்று ஸ்ருஷ்டித்தார்கள். அதற்கு மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று பெயரிட்டார்கள். அது 500 வருஷங்களுக்கு முன்பே அவதரித்ததாக வைத்துத் தமிழிலும் தெலுங்கிலும் அச்சிட்டிருக்கிறார்கள். அதற்கு மூலமாக ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவமென்று இருந்ததாகவும் அது மட்டும் லுப்தமாய்விட்டதென்றும் மூவாயிரப்படிதான் தற்காலம் தங்களுக்குக் கைவிளக்கென்றும் தெரிவித்தார்கள். அது, தென்னாசார்ய ஸம்பிரதாயத்தில் ஆதரிக்கப்பட்டு வருகிற குருபரம்பராப்ரபாவத்தையே வைத்துக்கொண்டு சிலவற்றைத் தள்ளியும் சிலவற்றைச் சேர்த்தும் மனம்போனபடியெழுதப் பட்டிருந்தபடியால் வடகலை ஸம்பிரதாயத்தில் வ்யபதிஷ்டர்களான மஹான்கள் தாமே அதைக் கல்பிதமென்று வெளியிட்டுவிட்டார்கள். வைகுண்டவாஸியான ஸ்ரீமத் திருப்புட்குழியப்பாஸ்வாமியின் சிஷ்யரான பிரபல வித்வான் ஸ்ரீ உவே. தண்டரி பட்டப்பா தாதாசாரியர் ஸ்வாமியும், பிறகு சாமா திருமலை தாதாசாரியரும் அதைக் கல்பிதமென்று வெளியிட்டிருக்கிறார்கள். கூரத்தாழ்வான் த்ரிதண்ட காஷாயங்களுடன் ராஜஸபைக் கெழுந்தருளினரென்றும், உடையவர் வெள்ளை சாத்திக்கொண்டு வெளியேறினரென்றுமுள்ள பல கதைகள் அபத்தங்களென்றும், அவை தென்கலையாருடைய நூல்களிலிருந்து அப்படியே களவாடப்பட்டனவென்றும் விரிவாக எழுதி வெளியிட்டிருப்பது விச்வப்ரஸித்தம்.

116. ஸமீப காலத்தில் தேசிக சரித்திரமெழுதி வெளியிட்ட சேட்லூர் நரஸிம்ஹாசாரியரும் தங்களுடைய ஸம்பிரதாயத்தில் ஆறாயிரப்படியும் மூவாயிரப்படியுமான இரண்டு குருபரம்பரா ப்ரபாவங்கள் தேசிகனுடைய ஸமீப காலத்தில் அவதரித்தனவாகத் தெரிவித்து அவையிரண்டும் அப்போதே லோபித்துவிட்டனவென்று முடித்திட்டார். இப்போது வடகலையார் ஆதரிக்கிற குருபரம்பராப்ரபாவம் நவீந கல்பிதமென்பதையும் சிலாசாஸனமாக எழுதி வைத்துவிட்டார். ஆகவே நவீநர்கள் கல்பனைகளில் கைதேர்ந்தவர்களென்பது பற்றி விவரிக்கவேண்டிய பொறுப்பு நமக்கில்லையாயிற்று. ஆக இவ்வளவால் இவர்களுடைய ஸம்பிரதாயத்தில் சரித்திரபரமாகச் சொல்லிவரும் விஷயங்களத்தனையும் நிர்மூலங்களென்றும் நிராதாரங்களென்றும் சச்சரவுகளுக்காக வேணுமென்றே கல்பிக்கப்பட்டவையென்றும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறிவிட்டது. இவர்கள் சொல்லுகிற—எழுதுகிற கதைகளுக்கு உண்மையில் ஒரு மூலக்ரந்தம் நானூறு வருஷங்களுக்கு முற்பட்டது இருந்தால் அதை அச்சிட்டு வெளியிடட்டும். அது எங்கிருந்து எப்படி

வரும். இனியாகிலும் வீண்வம்பு ஐதிஹ்யங்களைச் சொல்லிப் பாமரர்களை வஞ்சிப்பதை விட்டிட்டு ஸாத்விகஸரணியை அவலம்பிப்பது நலம்.

**— நேற்று ஆவணி ஹஸ்தத்தில் முக்கூரில் நடந்த ஸம்பாஷணை —**

117. ஆவணித் திங்களில் ஹஸ்தநக்ஷத்திரத்தன்று முக்கூரில் திருநக்ஷத்ர பரிபாலனார்த்தமாகப் பலர் கூடினர். ஸ்ரீரங்கநிமந்த்ரண கதை ஸ்வாமியும் அங்கு வந்து சேர்ந்தார். திருவரங்கத்தமுதனார் நடத்திய ச்ராத்தத்தில் "கொத்துசாவியைக் கொடுத்தாலன்றி த்ருப்தோஸ்மி சொல்லமாட்டேனென்று சொல்லும்" என்று நியமித்து வலிகட்டாயமாகச் சாவிகளை வாங்குவித்துக் கோவிலையெல்லாம் தென்கலையாக்கிவிட்டதாகக் கதையெழுதி ப்ரஸித்தி பெற்றிருப்பவர் எவரோ அவரே ஸ்ரீரங்க நிமந்த்ரண கதை ஸ்வாமியென்பவர். அவரை நோக்கி ஸ்ரீஸ்வாமி கேட்டருளினதென்னவென்றால், " ஓய்! சிறிதும் ஆலோசியாமல் இப்படி கூடவா எழுதிவைப்பது ?" என்று கேட்டபடி. அதற்கு அந்த நிமந்த்ரணஸ்வாமி விடைகூறினதென்னவென்றால்; "நிமந்த்ரண கதையையும், நிர்ப்பந்தப்படுத்திக் கொத்துச்சாவியை வாங்கிக் கோவிலைக் கெடுத்ததையும் நானெழுதியிருக்கிறேனேயொழிய பாஷ்யகாரர் காலத்திலென்று நானெழுதவில்லை; நிமந்த்ரண நிர்ப்பந்த கதை பாஷ்யகாரர் காலத்தில் ஒன்று நடந்தது வாஸ்தவம்; அது கோயிலொழுகில் காண்பதுதான். அதையன்று நானெழுதினது. ஸ்ரீரங்கம் தேசிகனுக்கு வடகலைத் திருமண்காப்பு சாத்தினதற்காக ஆயிரம் ரூபாய் அபராதம் விதித்து ஹைகோர்ட்டுவரை காயமான கதை ஒன்று உண்டே; அது நடந்ததற்கு 40, 50 வருஷங்களுக்கு முன்பு இரண்டாவது தடவையாக இந்த நிமந்த்ரண நிர்ப்பந்த கதை நடந்தது; அதைத்தான் அடியேனெழுதினேனேயொழிய பாஷ்யகாரர் காலத்துக் கதையையெழுதினேனில்லை" என்று விடை கூறினர். "அந்தக் கதை கோயிலொழுகில் இருப்பது போல் இந்தக் கதை எந்த நூலிலுள்ளது ?" என்று ஸ்ரீஸ்வாமி கேட்க; "பூர்வமீமாம்ஸையில் ஐதிஹ்யாதிகரணத்தில் ஸகலப்ரமாணங்களையும்விட ஐதிஹ்யமேப்ரபல ப்ரமாணமென்றன்றோ நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்கிறது; இக்கதையை என்தாயார் சொல்ல நூறு தடவை கேட்டிருக்கிறேன்; மாமியார்களும் சொல்லப் பலகால் கேட்டிருக்கிறேன். இங்கே கறியமுது திருத்த வந்திருக்கிற எந்த அம்மையாரைக் கேட்டாலும் தெரியவருமே" என்று சொல்லி முடிக்கலானர். ஸ்ரீஸ்வாமியும் அப்படியாவென்று மந்தஹாஸத்தோடு முடித்திட்டார்.

**— சந்தமிகு தமிழ் மறைப் பதிப்பின் பரிசு —**

118. "சந்தமிகு தமிழ் மறை — முதலாயிரம்" என்றொரு புதிய பதிப்புப் புத்தகம் இப்போதே நமக்குக் கிடைத்தது. இப்பதிப்பிலுள்ள அஸம்பத்தங்களை வரையவேண்டுமானல் "நிச்சேஷமம்பரதலம் யதி பத்ரிகாஸ்யாத்" என்கிற பாதுகா ஸஹஸ்ரச்லோகத்தின்படியே ஸௌகரியம் வாய்க்கவேணும். ஆனல் நமக்கு யாதொரு சிரமத்தையும் வைத்திடாமல்

இப்பதிப்பாளர்தாமே அவசாத் இதை வெளியிட்டுவைத்திருக்கிறார். முகப்பில் ‘பதிப்பாளரின் விண்ணப்பம்’ என்று தொடங்கியுள்ள அறிக்கையில்

**“இப்பதிப்பு விஷயத்தில் சொல்லக்கூடிய ஆக்ஷேபம் ஒன்றே ஒன்றுதான்; அது என்னவென்றால், இதில் கூறப்பட்டிருக்கும் சில அம்சங்கள் புதியனவாயிருக்கின்றனவே என்பதே”**

என்றெழுதியுள்ளார். இந்தவாக்கியத்தில் சில என்றதைப் பல என்று திருத்திக்கொள்வது. பெரும்பாலும் ஸகல விஷயங்களும் அஸம்பத்தமாகவே யெழுதப்பட்டன வென்பதைத் தாமே தெரிந்துகொண்டு அதை வெளியிடாதிருக்க முடியாமல் வெளியிட்டும் வைத்தார். தலைவேதனை யென்று ஒன்றுண்டு; அது இப்பதிப்புதானென்பதில் ஐயுறவேண்டா. நாலாயிரத்தையும் பூர்த்தியாகப் பதிப்பு செய்வதற்கு இன்றியமையாத திரவியம் இரட்டிப்பாக இவ்வோராயிரத்திற்குச் செலவு செயயப்பட்டிருப்பது அந்தோ! ஆற்றில் கரைத்த புளியாயிற்று.

119. இதைப்பற்றி நமக்கு நினைவுக்கு வந்தச்லோகமிதுவே;
* யத்யபி ந காபி ஹாநி: பரகீயாம் சரதி ராஸபே த்ராக்ஷாம்.
அநுசிதமிதமிதி மத்வா ஹாஹா ஹாஹேதி தூயதே சேத:.* என்பதே.

எவனோவொருவனுடைய திராக்ஷைத் தோட்டத்தில் ஒரு கழுதை புகுந்து பழங்களை மேய்ந்துகொண்டிருக்கக் கண்ட ஒரு வழிப்போக்கன் கல்லையும் தடியையுமிட்டு அக்கழுதையை நலிந்தான். அதைக் கண்ட ஒருவன் ‘அப்பா! ஏதுக்கு நீ வீணாக சிரமப்படுகிறாய்? இந்த திராட்சைத் தோட்டம் உன்னுடையதன்று, உன்னைச் சேர்ந்தவர்களுடையதுமன்று; இதில் கழுதை மேய்ந்ததனால் உனக்கென்ன கெடுதல்? உனக்கு வேணுமானால் நீயும் புகுந்து நாலு பழங்களைப் பறித்து உண்பதை விட்டு, உண்கிற கழுதையை ஏதுக்கு ஹிம்ஸிக்கிறாய்?” என்றான். அதற்கு அந்த வழிப் போக்கன் சொல்லுகிறான் [யத்யபி ந காபி ஹாநிரித்யாதி.] இத்தோட்டம் என்னுடையதன்று, எவனோ வொருவனுடையதுதான். இங்குள்ள கனிகளைக் கழுதை மேய்வதனால் எனக்கு யாதொரு நஷ்டமுமில்லைதான். திராக்ஷையின் இனிமையோ கழுதைக்குச் சிறிதும் தெரியாது. இன்று நமக்கு திராக்ஷை கிடைத்து விட்டதே யென்று ஸந்தோஷிக்கவுமறியாது. தமட்டங்காய்க்கும் திராக்ஷைக்கும் வாசியறிந்து மகிழ்ந்து தின்கிற பிராணியாயிருந்தால் அதட்டமாட்டேன். தன் பிறப்புக்குத் தகுதியற்ற காரியத்தை இக்கழுதை செய்வதனால் கண்டு ஸஹித்திருக்க முடியவில்லை—என்றானாயிற்று. இப் பதிப்பாளர் தம்முடைய அதிகாரம் இவ்வளவிற்றென்று தெரிந்துகொள்ள மாட்டாதவரல்லர். தம்முடைய தத்துவநிலைமையை உலகமெல்லாம் தெரிந்துகொண்டிருக்கிறதென்று நன்கு தெரிந்துகொண்டிருப்பவரேயிவர். இப்படியிருந்தும் பல்லாயிரம் ரூபாய்களைப் பெருங்கடலில் கரைத்த பெருங்காயமாக்கினரேயென்று வருந்தாதிருக்க முடியவில்லை. இவர் முன்னுரையாகவும் முகவுரையாகவும் எழுதியுள்ள அபத்த அஸம்பத்த விஷயங்கள் யாவும் நமது இந்நூலினால் நிச்சேஷமாக நிரஸிக்கப்பட்டுப் போயின

வென்பதை விவேகிகள் உணர்வார்கள். இது நாம் வெறுமனே எழுதுவதன்று, அதையும் இதையும் வைத்துப் பரீக்ஷித்துப்பார்க்கலாம்.

120. இப்பதிப்பில் நமக்கு இரண்டு சந்தோஷம். அதைத் தெரிவிக்க வேண்டியது க்ருதஜ்ஞக்ருத்யமாகையால் தெரிவித்துவிட்டு இந்நூலை முடித்திடுகிறேன். மூலபாடங்களை ஒழுங்குபடுத்துவதற்காக நம்முடைய திவ்யார்த்ததீபிகையுரையில் மிகவும் உழைத்திருக்கிறுரென்பது மிகச் சிறிய ஸந்தோஷம். இரண்டாவதான மிகப்பெரிய ஸந்தோஷத்தைக் கேளீர். இவர் டில்லியில் வாழ்ந்த காலத்தில் கடிதங்கள் மூலமாக நம்மோடு தர்க்கிக்க ஆசைகொண்டு வாதவிவாத ரூபமாகவே சிலபல கடிதங்களெழுதியுள்ளார். "சட்டியிலிருப்பது தானே அகப்பையில் வரும்" என்கிற பழமொழிக்குச் சான்ருக ஸ்வாசார்யருடைய அபத்தங்களையெல்லாம் இவர் தாமும் தழுவி வந்தார். சட்டிஸ்தானத்திலுள்ள அவர் அபத்தமயமாக எத்தனையோ காகிதங்களைக் கறுப்பாக்கி நம்முடைய பலநூல்களினுல் தெளிவு பெற்று க்ஷாமணப் பத்திரிகாப்ரேஷணத்தோடு விச்ராந்தாராஞரென்பதைப் பண்டித வுலகம் மறந்திராது. அவர் தம்முடைய பெயரை 'நரஸிஹ்மாசாரியர்' என்றே எழுதி வந்தார். அவருடைய பல தவறுகளையும் கண்டித்த நாம் இந்தத் தவறையும் கண்டித்திருந்தோம். "உம்முடைய பெயரையே உள்ளவாறு தெரிந்துகொள்ளமாட்டாத நீர்......." என்று தொடங்கி நாம் தெளிவு பெறுத்தியிருப்பதை நினைப்பூட்டுகிறேம். வடமொழியில் (ஸிஹ்ம) என்கிற சொல்வடிவம் கிடையாது; (ஸிம்ஹ) என்றேயுள்ளது, இதைக்கூட அவர் தெரிந்துகொள்ளகில்லாமல் ஸிஹ்ம ஸிஹ்ம என்றே பலகாலு மெழுதியச்சிட்டு வந்தார். இதை நாம் உலகமறியக் கண்டித்திருக்கிறேமென்பதை அகப்பை ஸ்தானீயரான இவர் அறிந்துவைத்தும், நமக்கெழுதும் கடிதங்களின் முகப்பில் "நரஸிஹ்மார்ய குருவே நம:" என்று எழுதிவந்தார். நாம் இவர்க்கு பதிலெழுதும்போது "வீணை ஆக்ரஹத்துடன் மனப்பூர்வமாக நீர் எழுதிவரும் இந்த அபத்தத்தை விலக்கிக்கொண்டாலல்லது நாம் உமக்கு வாதபிக்ஷையளிக்ககில்லோம்" என்று தெரிவித்தோம் அவிவேகிகளின் ஆக்ரஹவியாதி மருந்தற்றதாகையால் மீண்டு மீண்டும் ஸிஹ்மார்ய குரு—ஸிஹ்மார்ய குரு வென்றே எழுதி வந்தார். அப்போது *அஜ்ஞஸ்ஸுகமாராத்ய:* என்கிற ஸுபாஷிதத்தை யநுஸந்தித்து நின்றேம். இப்போது இவர் இவ்விஷயத்தில் துராபிநிவேசத்தை விட்டுத் தொலைத்து நரஸிம்ஹ—நரஸிம்ஹ. என்றே பதிப்பித்திருப்பதால் ஒன்றிலாவது திருந்தினரேயென்று பரமஸந்தோஷ மடைந்தோம்.

இங்ஙனே இவர் க்ரமேண எல்லாத் தவறுகளிலும்
தெளிவுபெறுவரென்று நம்பி நிற்கின்றேம். .... ... *

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

**ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் எழுதிய**

**பிரபந்தஸாரதத்வஸாரம் முற்றுப்பெற்றது.**

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★